விவேகானந்தர் கல்விக் கழக வெளியீடு-௪.

# இன்று மனிதனும், இனிவரும் மனிதனும்

(The Present Man & The Coming Man)

---

ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்
அவர்களால்
திரு. அ. பழ. பழனியப்ப செட்டியாருக்கு
எழுதப்பட்ட

## அன்புக் கடிதம்

---

விவேகானந்தர் கல்விக் கழகம்
ஆவினிப்பட்டி
தென்னிந்தியா.



[விலை 2 அணா




# இன்று மனிதனும் -
# - இனிவரும் மனிதனும்



ஸ்ரீ

சுவாமி விவேகானந்தர்.



என்றுங் களிப்பெய்தி, யென்வரினும் சோர்வின்றி,
நின்றநிலை சாந்தம் நினை.



உ

# இன்று மனிதனும், இனிவரும் மனிதனும்.



ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார்
அவர்களால்
திரு. அ. பழ. பழநியப்ப செட்டியாருக்கு
எழுதப்பட்ட

## அன்புக் கடிதம்.



விவேகானந்தர் கல்விக் கழகம்,
ஆவினிப்பட்டி,
தென்னிந்தியா.

1937] [விலை 2 அணா

# முன்னுரை.

இக் கடிதநூல் இன்று தமிழன்னையின் திருவடித்தாமரையில் வைத்து வணங்கப் படுகிறது. தமிழிலக்கியத்தில் அறிவுகொளுத்தும் பல அரிய கடித நூற்கள் பெருக வேண்டுமென்று நீண்ட நாளாக எண்ணியிருந்தேன். மேனாட்டார் கடிதநூற்களுக்கு ஓர் தனிச் சிறப்பைத் தந்துள்ளனர். தமிழருக்கு அச்சுவையைச் சிறிதளவேனும் ஊட்டலாமெனக் கருதி, சென்ற ஆண்டில் "தனவணிகர் முன்னேற்றம்," என்றதோர் அன்புக் கடிதத்தைப் பிரசுரித்தேன். அது நன்கு பாவி தமிழரிடையே பெரும் பயன் அளித்திருப்பதை யறிந்து, மற்றோர் கடிதத்தை "இன்று மனிதனும், இனி வரும் மனிதனும்" எனப்பெயரிட்டு இப்போது வெளியிடலானேன்.

இஃது ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்களால் எளியேனுக்கு எழுதப்பெற்றது. என் பாக்ய வசத்தால் சுமார் மூன்றாண்டுகட்கு முன்னர் ஸ்வாமி அவர்களின் பேரன்பிற்கு உரியவனானேன். அன்று தொட்டு அடிகள் எனக்குப் பல அன்புக் கடிதங்களை எழுதிவந்திருக்கிறார். அவை ஒவ்வொன்றிலும், இப்பெரியாரது குழந்தையுள்ளமும், கொஞ்சும் அன்பும், செஞ்சொல் அழகும், தெய்வப் பற்றும், தேசுறு வாழ்வும், ஆழ்கருத்தமைதியும், அறிவுச்சுடரும் பகலொளி போன்று பளிச்சிடுவதைக் காணலாம்.

இக்கடிதத்தில் இன்று மனிதனின் போலி நடையையும், இல்லறம், அரசியல், சன்மார்க்கத்துறைகளில் அவன் அடைந்து வரும் சீர்கேட்டையும், சாதிமத

நிற வேற்றுமையால் நாட்டு வெறிபிடித்து மனிதனை மனிதன் பிய்த்துத் தின்னும் அசுரமாயத்தையும், அற வலி குன்றி உலக நிலை நாளுக்கு நாள் கலக நிலையாகிக் கொண்டு வருவதையும் எடுத்துக் காட்டப்படுகிறது. அத்தோடு, அவையனைத்திற்கும் மருந்து இனிவரும் **மனிதன்** சுத்த சுதந்திர நோக்கொடு கடவுட்கலப்பில் ஒன்றி, உலகாலயத்தில் அருட்பணிபுரிந்து பிறர்க்கென வதியும் புதிய வாழ்வில்தான் உள்ளது என்றும், இத் தெய்வ சேதன வாழ்வே **பாரத தர்மத்தைக்** காக்க வல்லது என்றும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இக்கடிதத்தை வெளியிடுவதற்கு அனுமதித்த ஸ்வாமி அவர்கட்கு எனது மெய்நன்றி என்றும் உரியது. இதை வெளியிட எம்மை ஊக்குவித்த **சிங்கப்பூர் அன்பு நிலயத்தாருக்கும்,** அச்சிடும்போது உடனிருந்து உதவிய ஷை சங்கக் காரியதரிசி **அன்பு-நடனத்திற்கும்,** என் நன்றியறிதலைச் செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன். இக்கடிதத்தை சிரத்தையுடன் அச்சிட்டுத் தந்த ஈப்போ, **மெர்க்கண்டைல் பிரஸ்** அதிபர் திருவாளர் **சோம. சிதம்பரம்** அவர்கட்கும் என் மெய்நன்றி உரியது. ஓம் சுத்த சக்தி.

இங்ஙனம்,
அ. பழ. பழநியப்ப செட்டியார்,
(ஆவினிப்பட்டி.)

**"Vivekananda Nilayam,"**
**No. 11, Cameron Street,**
**SEREMBAN. F.M.S.**

15—4—37.

# பொருளடக்கம்

சுவாமி

சுத்தானந்த பாரதியார்.



அன்பின் வடிவேயாம் ஆன்மா; அதுகாட்டின்
வன்பகையும் நட்பாய் வரும்.

# சக்தி வழிபாடு.

1.

சங்க நாதம் முழங்குக! மத்தளம்
தாளம் போட்டுத் தரிகிட தோமெனப்
பொங்குக சுப மங்கள வாத்தியம்!
பூக்கள் தூவி, நறும் புகை போடுக!
“ சங்கரீ சக்தி சாமுண்டி பைரவீ,
சாம்பவீ சிவ கௌரி,” யென் றுள்ளன்பர்,
சிங்கநாதம் கடல் முர சென்னவே
திசை குலுங்க வழங்கி வணங்குவோம்!

2.

சித்த சுத்தியை யாலய மாக்கியே,
செய்ய நெஞ்சகத் தாமரைப் பீடத்தில்,
வைத்து தேவி “ பராம்பிகை ஓம்,” என
வாழ்த்தி, யன்பு மலர்கள் சொரிகுவோம்!
சக்தி சக்தி சிற் சக்தியென் றெல்லாரும்
சரண்புகுந்து, சாகாவர மெய்தவோம்!
சத்திய வொளி காட்டி நடத்துவாள்
சக வுயிர்க்குயி ரான மகேஸ்வரி!

3.

பொய் யகந்தையைச் சுட்டுப் பொசுக்குவோம்!

பூசல் மிக்க பொறுமையை வெட்டுவோம்!

வெய்ய கோபத்தை யெட்டி விலக்குவோம்!

வேறுபாடு செய் மாயையை நூறுவோம்!

தூய்யகங்கை போல் வாழ்வை வளஞ்செய்யும்

சுத்த சக்தி யருளிற் குளித் தூய்வோம்!

மெய்யர் நெஞ்ச மலர்களைக் கோத்தொரு

வெற்றி மாலையாய்ச் சூட்டிப் பணிகுவோம்!

4.

ஓய்ந்து சோர்ந் துறங்காமல் எழுந்துநில்!

உள்ளமே சக்தி ஓமென் றிசைத்திடு!

சாய்ந்து தீமை நலந்தழைத் தோங்கிடும்

சன்ம சாபல்ய மாகி மகிழுவோம்!

வாய்ந்த வாழ்வை வாடாமல ராக்கியே

மங்களத்திருத் தாய்க்கணி செய்குவோம்!

பாய்ந்தவள் பர மானந்த வெள்ளத்திற்

பக்த ரெல்லாஞ் சுயேச்சையாய் நீந்துவோம்!

1-4-37 }- சுத்தானந்தபாரதி.

ஓம் சுத்த சக்தி.

# ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக் கழக வாழ்த்து.

---

1.

பார் முழுதும் பராபரன் கோயிலே.
ஓர் பிரமம் உயிர்க்குயி ரானது.
தேர்ந்திவ் வுண்மை, சிறுமன மாயஞ்செய்,
சோர்வு நீக்கித் துணிந்துநில் வீரனே !

2.

விழிமின், ஞான விளக்கொளி தூண்டுமின்.
எழுமின் ஓம்தத்ஸத் ஓமென் றியம்புமின் !
உழைமின் வீறுகொண் டோங்கிமுன் னேறுமின் !
செழிமின் சக்தி சிவானந்த வெள்ளமே.

3.

பாரதத் திரு நாட்டின் பழமறை
ஆர் முரசம்; அதிர உலகெல்லாம்
கார் கடலக் கடந்துகர்ச் சித்தனன்
தீரனும் விவேகானந்தச் சிங்கமே !

4.

அந்த தேவன் அரும்பெயர் சூடியே,
எந்தம் அன்னை யினிய தமிழ்த்தெய்வம்,
தந்த மைந்தர் கலைதழைத் தோங்கவே,
இந்தக் கல்விக் கழகம் எழுந்ததால்.

5.

காவளக் கனி யுண்டு குயிலினம்,
தேவ தேவன் திருப்புகழ் பாடிடும்,
ஆவினிப் பட்டி யன்பர் அருஞ்செல்வர்,
சேவை தீந்தமி ழென்னச் சிறக்கவே!

6.

அடிமை யென்னும் அரக்கன் கரங்களாம்,
மடமை, வெய்ய வறுமையைப் போக்கவே,
கடமை செய்பவர் காப்பவர் நாட்டினைத்
தடையில் லாதவர் தர்ம முயர்கவே!

7.

மண்ணிலத்து மனிதர்க்கும் மாதர்க்கும்,
கண்ணெ னத்தகுங் கல்வி வளர்த்தலே,
புண்ணியமப் பொதுநல வீரர்கள்
பண்ணுந் தொண்டு பயன்பழுத் தோங்கவே.

8.

இருளை யோட்டி யிலங்குக ஞானமே;
அருளை யூட்டியுள் ளன்பு பொலிகவே;
மருளை மாற்றிடும் வாய்மை யுளந்தோறும்
பொருளைக் காட்டி வழங்குக பூரணம்.

9.

ஓதி நன்மை யுணர்ந்து தெளிந்தறம்,
தீத கன்று திருமண வாழ்வினில்,
மாதர் மங்கலப் புன்னகை வானொளி,
சோதி வீரர் செயலிற் சுடர்கவே!

10.

கல்வி யோங்குக ! கைத்தொழி லோங்குக !
செல்வ மாகிய செந்தமி ழோங்குக !
வெல்லு மாத்ம சுதந்திர வீறுடன்
பல் வளஞ் செழித் தோங்குக பாரெல்லாம் !

11.

அழகு மன்பு மமுது மறிவருள்
பொழியும் வாணி யுலாவும் பொழிலெனப்
பழனி யாண்டவன் பாலிக்கும் ஆவினிக்
கழக மோங்குக கல்வி செழித்தரோ !

விவேகானந்தர் திருவடி வாழ்க.

—சுத்தானந்த பாரதி.



ஓம்

சுத்த சக்தி.

# இன்று மனிதனும், இனிவரும் மனிதனும்.

## 1. இன்று மனிதன்.

### 1. உலக நிலை.

அன்ப,

காலதேவி புதிய காலையை நோக்கி யாத்திரை செய்கிறாள். உலகம் இன்று அந்த யாத்திரையில் நள்ளிரவைத் தாண்டிக் கொண்டிருக்கிறது. இன்று காணும் பலபல அரசியற் கிளர்ச்சிகளும், சமூகக் கொந்தளிப்புகளும், அந்த முன்னேற்ற யாத்திரையின் பேரொலியே. பாசிபிடித்த பழைமையான வாழ்வுக் குளத்தைத் தூர்வையெடுக்கும் சலசலப்பே. மனிதனை வெகுநாட்களாக வருத்திய சாத்தானுக்குச் சாவுமணி யடித்தாயிற்று. அவன் அலறியோடும் இடிமுழக்கமே உலகில் இன்று நாம் காணும் போர்கள். அசுரபலங்கள் உலகை யாளுகின்றன! அவை வீசும் குண்டுகள் தமது வாழ்வையே தவிடுபொடி யாக்குகின்றன.

உலக நிலை கலக நிலை. உலகரங்கம் அதலகுதலப் படுகிறது. எத்தனையோ சூட்சிகள், திடீர் நிகழ்ச்சிகள், கண்ணைப் பறிக்கும் காட்சி மின்னல்கள்! இயந்திர நாகரிகம் தலை கிறுக்கும் வேகத்தில் தாவி முன் செல்லுகிறது இயற்கையை வெல்லுகிறது. உயிர்களைக் கொல்லுகிறது. மலைமலையாகப் பொருள்களைச் செய்து குவிக்கிறது. அத்தனையும் விற்கச் சந்தை தேடுகிறது. அதில் போட்டி போர் பொறாமை எல்லாம் வருகின்றன. மேல் வானத்தில் போர் மேகங்கள் குமுறு

கின்றன. குண்டுகள் பொழிகின்றன. நச்சுப்புகை மூச்சை யவிக்கிறது. மனித வாழ்வு பீரங்கி முனையி லுள்ளது. அரசியல் வானம் முழுதும், தடதடவென்று போர் முழங்கும் இரத்த பேரிகைபோலக் காண்கிறது. அந்த இரத்த வானத்தில் அமைதிக்கதிர் அஸ்தமித்து விட்டது. முடியரசு, குடியரசு, தன்னரசு, பொதுவரசு, எல்லாம் போர்முரசிற்கே தாளம்போட்டுத் தாவுகின் றன. அரசியற் சதுரங்கத்திற் பலவிதமாகப் பகடை உருளுகிறது. வாணியப் போட்டி, மந்தம், யந்திரப் பெருக்கம், வேலைச் சுருக்கம், மனித சக்தியின் உறக் கம், ஏழையின் கண்ணீர், செல்வரின் இடம்பநாடகம், ஆணவ மாயத்தின் அட்டூழியம், நாத்திகத் தடிப்பு, ஆத்ம ஞான சூனியம் இவை உலகெங்கும் படர்ந் துள்ளன பணம், படை, இரண்டே வல்லரசுகளின் பல்லவி. ஆத்திரப்படபடப்பு ஆகாய வாணம் போலப் பறக்கிறது. போர்க் கருப்பனுக்கு பலிக்கடாக்களா கவே, மேற்கே மனிதன் பிறப்பதுபோலத் தோன்று கிறது. ஆண்மட்டுமில்லை. பெண்களும் இப்போது துப்பாக்கி பிடிக்கின்றனர். தனதே நாடு, தனக்கே உலகம், தான் வைத்ததே சட்டம், என்னும் ஆணவத் திமிர் படைவலிகொண்டு, உலகை நடுக்கி நச்சுபுகை யால் மூச்சை யவித்துப் பிணக்குவைமீது வெறி நடம் புரிந்துகொண்டே, வெற்றி முரசடிக்கிறது.

## 2. பௌதிக அற்புதங்கள்.

பௌதிக அற்புதங்கள் எந்த நாட்டைக் கௌவ லாம் என்று விண்ணில் வட்டமிடுகின்றன! குற்றமற்ற மக்களை குண்டுபோட்டு மடிக்கின்றன. ஈகை இரக்கம், அன்பு, ஆதரவின்றி நாடுபறித்துக் கேடு செய்யும் அசுர மாயத்திற்கே அரண் செய்கின்றன! "டபார்ர்ர்!" ஊர் அதம்! ஐயோ என்பதற்குள் ஆயிரம் பேர் எம லோகம்! தாருகா, தசமுகா, திரிபுராதிகளே, கம்ஸா,

துரியோதனு, காலகேயநிபாத கவசர்களே, நீங்களெல்லாம் சாதுக்களானீர்கள்! பௌதிக மாயம் எவ்வாறு படமெடுத்துச் சீறி வாழ்வாற்றை நஞ்சாக்குகிறது. ஒவ்வொரு நாடும் பீரங்கிக் கோட்டையில் போரங்கி பூண்டு, புலிப்பாய்ச்சலில் நிற்கிறது! பௌதிகமே, உன் மூளை எரிமலையா? உன் கைகள் எமபாசமா? உன் வாய் கபந்தனு? உனது பேராசைக் கோட்டை திரிபுரமா? நாகரிக தேவதையே, நீ கொண்ட பலி போதாதா? பின்னுல் ஆயுதங்களைக் குவித்து, முன்னுல் ஆயுதங் குறைத்து அமைதி நிலைநாட்ட வேண்டுமென்று. பல்லாண்டுகளாகப் பல்லவி பாடினர். அனுபல்லவி என்ன? "டமார், படார், படபட் டொம் டொப்!" **அடுவா, அடிக்ராவில்** இத்தாலிய குண்டு சண்டை மாருதம் பொழிந்தது! ஆகாயவிமானத்தினின்று நாகரிகப் பிரசாதம் வழங்கினர் படித்துச் சொன்னுல் கறுப்பு மூளையில் ஏருதென்று அடித்துச் சொல்லுகிருர் மறவலி வீரர். அதே குண்டு இத்தாலிய சோமாலியில் விழுந்திருந்தால் வெள்ளையுலகமே கொள்ளி கொண்டு குதிக்கும். போச்சே ஐரோப்பிய மானம் என்று. அக்கணமே அபிஸீனியா அப்பளமாகியிருக்கும் தன்மேல் பழிவராது தப்பினுர் டபாரி.

## 3. தர்மமெங்கே?

அரசியற் புலவர் நடாத்திய கூட்டங்களும், ரவாணுக்களும், உடன்படிக்கைகளும் ஜினிவா நாடகங்களும் என்னவாயின? கறுப்பு மனிதனுடன் உட்காரக்கூடச் சகியாது நிறத்திமிர் அகங்கரித்தது! தருமமெங்கே? நீதி யெங்கே? சத்திய மெங்கே? எங்கே போகும்? வேண்டிய பேர் பைபிளில் பார்த்துக் கொள்ளுங்கள்! ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தைக் காட்டலாம்? முதுகில் குண்டு படார் என்று விழுந்தால் முன்பக்கத்தைத் திருப்பிக்கொண்டு

அப்பா மூஞ்சியிலும் வேண்டுமானால் குண்டு வீசு என்பதா? வலியுள்ள மட்டும் எதிர்த்துத்தான் என்ன? அம்பு விட்டு ஆகாச குண்டை எதிர்க்கமுடியுமா? நச்சுப் புகையுடன் சிலம்பம் வீசமுடியுமா? இலையறுத்தவன் குலையறுப்பான் என்றபடி மறவலி மென்மேலும் மண்ணைக்கவர்ந்து வருகிறது. ஐந்து கண்டத்தில் நாலரைக் கண்டம் அதன் கையில் உள்ளது. வாளால் எதிர்க்க வல்லமையில்லை ஆளால் எதிர்க்க ஒற்றுமை யில்லை. எதிர்த்தவன் ஒரு டப், எமலோகம்! எதியோப் பியா தன்னால் ஆனமட்டும் எதிர்த்துப்போராடியது. இத்தாலிய குண்டு தனது எல்லையில் விழுந்ததும் காண்டாமிருகத்தோல் போர்த்த போர்முரசை முழங் கினர். வீடு தீப்பிடித்தால் சீவனற்றவன்கூட எழுந் தோடுவான். கனத்த சாமான்கூட லேசாகும். அப் படிப்பட்ட நெருக்கடி எதியோப்பியாவிற்கு வந்தது. எதியோப்பியரின் போர்ப்பாட்டுக்கள் சில லெ-மாதான் (Le-Martin) என்ற பிரெஞ்சுப் பத்திரிக்கையில் வந்திருந்தன. அவற்றிலுள்ள உணர்ச்சியைப் பாருங்கள் :—

## வீரர்காள்!

நாட்டினைக் காத்திடலே—இன்று
நம்மவ ரின்கடமை
வீட்டினைத் தாக்குகின்ற—பகை
வீழச் சமர் புரிவோம்.

தெய்வத் துணையுறுதி—தர்ம
தேவி பலந் தருவாள்
வெய்யவரை நொருக்கப்—போர்
வீரர்களே யெழுமின்!

அன்ன யுயிரி னுக்கே—யின்று
ஆபத்து வந்ததடா!
பின்ன நமக் குயிரேன்? —ரண
பேரிகை கொட்டிடுவோம்!

ஒன்னலர் வீழ்ந்தொழிய—தர்மம்
ஓங்கித் தழைத் தோளிர,
முன்னடி வைத்துவிட்டோம்—இனி
முண்டிச் சமர் புரிவோம்!

நாட்டுயிர் வாடுதடா,—இந்த
நாற்ற வுடல் சதமோ?
வீட்டுக் குயிர் தருவோம்—உண்மை
வெல்லுமெ னத்துணிவோம்!

கூற்றெதிர் நின்றிடினும்—வாளாற்
குத்தி மடித்திடுவோம்!
சாற்றுங்கள் அச்சமில்லை—வீர
சக்தி ஜயந்தருவாள்!

இதைவிட வீர வுணர்ச்சியை, இதைவிட தேசாவேசத்தை, இதைவிட வீரக்கிளர்ச்சியை எங்கும் எதிர் பார்க்க முடியாது. அறம் உள்ளது, ஆண்டவன் உள்ளான், அச்சமில்லை என்று திசையதிரத் தோள் கொட்டினர், வீரர். கலகலவென்று வாட்கள் இரத்த நகைபுரிந்தன! ஆகாச குண்டும் அதிரும்படி வீர கர்ஜனை செய்தனர். ஆண் பெண் அடங்கலும் இவ்வாறெழுந்து அறப்போர் புரிந்தனர். முடிவென்ன?

முன்னே, 300 வீரருடன் பாரசீகப் படைவெள்ளத்தை எதிர்த்த கிரேக்க சூரன் லியோனிதன் போலும், ஹல்தி கட்டத்தில் எல்லையற்ற முகலாயப் படையை எதிர்த்த தர்ம வீரனான ராணா ப்ரதாப சிம்ஹன் போலும், அபிஸீனியா உரிமையிழந்து வீழ்ந்தது! அகரத்தில் தொடங்கும், அபிஸீனிய நகரங்களையெல்லாம் தனது அகங்கார பலத்தால் மறவலி கவர்ந்தாலும், ஒரு அகரத்தை மட்டும் நெருங்கமுடியாது; அதுவே என்றுமுள்ள அறம்.

அடிமைபோற் குனிந்தி டாமல்,
ஆண்மையும் அறமுங் கொண்டு,
கொடுமையை யெதிர்த்து வீழ்ந்தார்
குன்றினும் உயர்ந்த வீரர்.
படுகொலை புரிந்து, நாட்டைப்
பற்றிய படையூற்றத்தார்
நடுநிலை முன்னே நாணி
நலிவதைக் காணு வோமால்!

அதர்ம துரியோதனன் அரசாண்டு வீழ்ந்தான், தர்ம புத்திரன் காடாண்டு வென்றான் என்பதை நினைப்பில் வைப்போம். தர்மதேவதை நச்சுப்புகை பொறுக்காமல், கிழக்கே முகத்தைத் திருப்பிக்கொண்டு திகைத்து நிற்கிறாள்.

## 4. மறவலி.

நம்முன் இவ்வாறு நடந்த அபிஸீனியப் போர் உலகநிலையை நன்கு விளக்கிற்று. ஒரு மூலையில் அமைதி, ஒற்றுமை என்று ஹா ஹா மகாதேவாப் போடுகின்றனர். அதன் முகத்திலேயே, எதிர் மூலையினின்று படார் வெடிகள் விழுகின்றன. சுவிசேடத்தை

விடச் சுயநலமே விசேடமாயிருக்கிறது. நெப்போலியன் மூட்டிய நரவேள்வித்தீ காட்டுத்தீயாக வளர்ந்து வருகிறது. நெப்போலியன் பெரிய மூளை; அசகாய சூரன்; அச்சமென்பதே அவன் அகராதியில் இல்லை. தான் கொன்று குவித்த பிணக் குவியல்களைக் கண்டு குதூகலப்படுவான். அவனும் சில காலம் எகிப்தைப் பிடித் தாண்டான்; ஐரோப்பாவை நடுநடுக்கினான். நெப்போ என்றால் நெருப்பு, கிலி! ஐந்து நிமிஷத்தில் வாதர்லூவில் (Waterloo) அவன் விதி மாறியது. கைதியாகி அவன் ஹெலனுவுக்குச் செல்லும்போது, பிரான்வின் நிலையென்ன? பரிதாபம்! இளைஞரெல்லாம் போர்ப்பேய்க்குப் பலியாயினர்! நாட்டில் கிழவரும், பெண்களும், பாலரும் ஆதரவின்றித் தவித்தனர்! வெள்ளியும், தங்கமும் போரில் புகைந்துபோயின! வறுமை, வரட்சி, புரட்சி, கொலை, இருள், கொடுமை! இதுவே பிரான்வின் நிலைமை. போதாக்குறைக்கு அயற்பகை. ஜர்மனி ஜன்மப்பகை. ஸ்பெயின் மேற்படி. ஸ்பெயினில் அப்போது நடந்த குழப்பமே ஐரோப்பியப் போருக்குக் காரணமாயிருந்தது. இன்றும் மேற்படி.

இன்றுவாள் வென்றதவ<br>
யின்னொருவாள் வெல்லுவதே<br>
என்றுமிம் மண்ணு ளியல்பு.

உலக வரலாறே இதற்கு அத்தாட்சி. நமது இந்தியாவிலேயே எத்தனை அரசாங்கங்கள் எழுந்து, நின்று, பொருதி, விழுந்து மறைந்தன! தமிழ்நாட்டு மூவேந்தர் எங்கே? அசோகன் சாம்ராஜ்யம் எங்கே? நந்தர், குப்தர், சங்கர், கானவர், ஆந்திரர், தமிழர், ரஜபுத்திரர், துருக்கர். முகலாயர் ஆண்டதெல்லாம் இறந்தகால மானதைக் காண்கிறோம். கிரேக்க, ரோம, கார்த்தாக, யூத வரலாறுகளெல்லாம் குருதியாறுகள், போர்க்களங்கள், இரத்த வெள்ளங்கள்! அந்த இரத்த நதி, கடலாய் விரிந்து வருகிறது முன்னே உடல் வலியால்

போர் நடந்தது. இன்று யந்திர பலத்தாலும், மூளை வலிவாலும் போர் நடக்கிறது. புதுப்புதுக் கருவிகளைக் கொண்டு மறவலி அறத்தின் குடலை நடுக்குகிறது. நாளை இன்னது நடக்குமென்று சொல்வதிற்கில்லை. அடுத்த நிமிஷம் ரேடியோவில் என்ன பயங்கரச் செய்தி பரவுமோ என்று அஞ்சுகின்றனர். ஒவ்வொரு வல்லரசும் ஆயுதங்களை வளர்த்துக்கொண்டு புதர்ப்புலி போலப் பாயச் சமயம் பார்க்கிறது. பறவைக் கப்பல் கள் வட்டமிடுகின்றன. தொலை நோக்காடிகள் சுற்றி லும் கண்ணில் திரிபோட்டுப் பார்க்கின்றன. குவித்த குண்டுகள் படபடக்கின்றன. மனித சமுதாயத்தின் பாதிவேலை குண்டுக் கிடங்கில்! படுகொலை, படுகொலை, படுகொலை! உலகன்னையின் மனந்துடிக்கிறது. மெலிந் தவர் உயிர் தடுமாறுகிறது. மறவலி தர்மத்தின் துயி லுரிகிறது. தரும தேவதை "ஹரி, ஹரி" யென்று கைகூப்பி வானை நோக்கி முறையிடுகிறாள்!

## 5. நல்ல எண்ணங்கள்.

அன்ப, இவ்வாறிருக்கிறது உலகநிலை. நாமெ ன்ன செய்யலாம்? முஸ்ஸோஜீயிடம் போய் "ஐயா 'அஹிம்ஸா பரமோதர்ம,' என்று வேதம் சொல்லு கிறது. நீர் செய்வது மகா பாபம். ஒரு கொலைக்கு ரௌரவாதி நரகம் என்றால் நீர் அபிஸீனியாவில் உயிர் களைக் கொன்று குவித்த கொடுமைக்கு எத்தனையோ நரகம் அனுபவிக்கவேண்டும். இந்தமட்டாயிலும் நிறுத் திக்கொண்டு, நல்ல சாஸ்திரிகளிடம் பிராயச்சித்தம் செய்து, ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள் ளும். குண்டு பீரங்கிகளை யெல்லாம் கடலில் எறிந்து, ஒரு கங்காஸ்நானம் செய்துவிட்டு, சாதுவாயிரும்" என்றால் என்ன கிடைக்கும்? ஹிட்லரிடம் போய், "ஏனய்யா வீணாக பிரான்ஸையும், ரஷ்ஷியாவையும் பகைக்கிறீர். நீர்பாட்டுக்கு உமது நாட்டை சீர்திருத்

திக்கொண்டு தான தர்மங்களைச் செய்துகொண்டி ரும். நீர் திரட்டிய அத்தனை படைகளையும் வீட்டிற் குப் போகச்சொல்லும். எல்லாரையும் ஒழுங்காக உலக சமாதானத்திற்காகத் தொழுகை நடத்தச்சொல்லும்," என்று உபதேசித்தால் என்னவாகும்? ரஷ்ஷியாவி டம்போய், "அப்பனே, சாமி பூதத்திற்குப் பயந்து நட. சர்ச்சை (Church) யிடிக்கிறாயாமே. சய், நாஸ்திகம் பேசாதே. ஜார் ஆட்சி ஏழையைக் கொன்றது, நீ பணக் காரனைக் கொல்லுகிறாய். கொலையில் நீ இளைத்தவ னில்லை. அது பாபமப்பா. சன்மார்க்கத்தை அநுசரி," என்றால்என்ன விழும்? இவ்வாறே மற்ற நாடுகளும். இப்போது நாம் செய்யத்தக்கதென்ன? நல்ல எண்ணங் களை மாந்தர் மனத்தில் விதைப்போம். எண்ணமே உலகம். பெரியார் எண்ணங்களே உலகை யாளுகின் றன. மாந்தர் மனத்தில் உயர்ந்த உண்மைகளை நடு வோம். உரிய காலத்தில் அவை முளைத்துக் கிளைத் துப் பூத்துப் பழுக்கட்டும். நமது நாட்டில் எத்தனை யோ வாளாட்சிகள் தோன்றி, வாளால் மடிந்தன. ஆதி முதல் அசையாது நின்று நிலைப்பதெது? அருட் புலவர் கண்ட அருளாட்சியே! புவி ராஜ்யம் வீழும், சிவராஜ்யம் வாழும்! மண்ணரசு மண்ணாகும், விண்ண ரசு பொன்னாகும். வேதரிஷிகள், கண்ணன், வியாசர், சுகர், வால்மீகி, சங்கரர், நம்மாழ்வார், மாணிக்கவாசகர் அப்பர், வள்ளலார், ஏசுநாதர், நபிநாதர், குருநானக், பரமஹம்ஸர். மகாத்மா காந்தி, ரமணமஹர்ஷிகள், அரவிந்தர் போன்ற பெரியார்கள் திருவாக்கன்றோ உலகில் நின்று நிலைக்கின்றன! அவையே மனித சமு தாயத்தை ஆக்கி வளர்க்கின்றன. அசோக ராஜ்யம் போயிற்று. சாக்யர் மரபு மறைந்தது. புத்தரின் தர்ம ராஜ்யம் உள்ளது. தர்மஸங்கம் உள்ளது.

அன்பனே. இப்போது மனித சமுதாயம் நள் ளிரவில் தடுமாறிக் கொண்டிருக்கிறது. மனிதவியல்பே

முற்றிலும் மாறவேண்டும். வாழ்வு புதுமை பெற வேண்டும். அதற்கேற்ற புதிய எண்ணங்களைத் தூவு வாம்! எட்டினமட்டும் பயனாகட்டும். தர்மமாகிய மலர் வனத்தை உண்டாக்குவோம். சிலருக்காயினும் அதன் பூமணத் தென்றலும், அமுதக் கனிகளும் பயனாகட் டும். உலகையெல்லாம் திருத்தப்போவதாக நாம் கங் கணங்கட்டிக்கொள்ளவில்லை. அது ஆண்டவன் செயல். அவன் உள்ளத்தில் மலர்விக்கும் உண்மைகளை, அப் படியே உலகன்னையின் திருவடியில் அர்ச்சிப்போம். அம் மலர்களை விரும்புவோர் அணிந்து, முகர்ந்து மகிழ்க.

## 6. இன்று மனிதன்.

அன்ப, சிந்தித்துப் பார். எதனால் உலகில் இவ்வ ளவு கொடிய கொலைகள் நடக்கின்றன? வீரர், வீரர் என்று உலகம் கொண்டாடும் சிக்கந்தர், ஸீஸர், நெப் போலியன் முதலியோர் என்ன செய்தனர்? கோடி கோடியாகக் கொன்று குவித்தனர். பலன்? பூபாரம் நீக்கும் காலருத்ரனுக்குத் துணைசெய்ததுதான். ஐய, இப்படிப் பெருவாரியான கொலைகள், தனிக் கொலை கள், பஞ்சமாபாதகங்கள் எல்லாம் நாளும் பெருகிவரு கின்றனவே! ஏன்? எவ்வளவோ வேதங்களும், சன் மார்க்க நூல்களும் உள்ளனவே. எத்தனையோ பேர் தர்மோபதேசஞ் செய்கின்றனரே? இரத்த வெறி ஒரு டிகிரிகூடத் தணியவில்லையே? ஏன்? மனித வாழ் வின் அடிப்படையில் அறவுணர்ச்சியில்லை. வாழ்வில் தர்மஸாதனமில்லாக்குறை. உடல் மினுக்கும், பேச் சும், பூச்சும், போலிநடையுடைகளுமிருந்து, சன்மார் க்க போதனைகள் உள்ளத்தில் பாய்ந்து வாழ்வில் பற்றி உலகிற்குப் பயன்படாது தடுக்கின்றன. மனித வாழ்வு எந்நிலையிலிருக்கிறது? ஸமரஸம், ஒற்றுமை சகோத ரத்வம் எல்லாம் உதட்டில் முத்துருளுகின்றன. மனம் போர், போட்டி, பொறாமைக் கடாகி வருகிறது. புத்தி

கத்தி தீட்டுகிறது மேற்கே. நமது நாட்டின் நிலையென்ன?

## 7. நாட்டு நிலை.

பாரத தர்மம் குலைந்து போயிற்று. பாரத ஸமுதாயத்தின் அடிப்படையாகிய ஆத்ம தர்சனமும், ஸர்வாத்ம தர்ஸனமும் வாழ்வினின்று விலகிக்கொண்டன. ஆத்ம சிந்தனையே அரிதாயிருக்கிறது. முதுநாகரிகமுமில்லை, புதுநாகரிகமுமில்லை; இரண்டின் தீமைகள் மட்டும் மனித வாழ்வைச் செல்லரித்து வருகின்றன. மகாஸ்தனிஸ், பாகியன், ஹியான்ஸாங், மார்க்கோ போலோ தோலமி முதலிய பிற நாட்டார்களும் வால்மீகி, கம்பர், இளங்கோவடிகள் போன்ற நம் நாட்டுக் கவியரசர்களும் போற்றிப் புகழ்ந்த அதே பாரத பூமியில்தான் வாழுகிறோம். நிலவளம் நீர்வளம், விளைவு, இயற்செல்வங்களுக்கு என்றுங் குறைவில்லை. அறிவு நூல்களும். அத்யாத்ம நூல்களும், கலைநூல்களும் ஏராளமாக உள்ளன. இருந்தும் நாட்டை வறுமை, மடமை என்னும் கபந்தக் கைகள் அள்ளி விழுங்குகின்றன. இந்தத் தெய்வக் காமதேனுவை இரும்புக் கரங்கள் இரத்தம் வரும்படி ஒட்டக் கரந்து குடிக்கின்றன. பாரதக் கன்றுகள் 'பசியோ பசி' என்று அலறுகின்றன நவநாகரிக மினுக்கில் நாட்டிற்குரிய நல்லறம், ஆசாரம். பக்தி, சிரத்தையெல்லாம் மழுங்கிப்போயின. இம்மின்னல் விளக்குகளின் விசை அத்லாந்திக் சமுத்திரத்திற்கு அப்பால் உள்ளது. அங்கு விசை மூடினால், இங்கு எல்லாம் இருட்டு. கட்டித்தங்கம் கப்பலேறுது; காயிதக் குப்பை காடாய்க் குவியுது. முத்தீ விளங்கிய மனைகளில், ஸ்வீடன் தீப்பெட்டியும், 'குரங்கு மார்க்கு' மண்ணெண்ணையும் வராவிட்டால் அடுப்பெரியாது; விளக்கெரியாது. வீதியெல்லாம் மோட்டார்ச் சத்தம், பெட்ரோல் புகை. உழுவதற்கும் யந்திரங்கள் வந்துகொண்டிருக்கின்றன. விவசாயத்திற்கும், வீட்டிற்

கும் உதவும் காளைகளும், பசுக்களும், கத்திரிக்காய், வாழைக்காய் மாதிரி கறிசமைத் துண்ணப்படுகின்றன. என்ன கொடுமை! உலகிற்கெல்லாம் ஆடை கொடுத்த நாடு அம்மணமாயிருக்கிறது. மானத்தை மறைக்கக் கூட மாஞ்சஸ்டர் வரவேண்டுமா? கொட்டை நூற்ற வீடுகளில், பட்டைநூல்கூடப் பரதேசி. மீனக்கொடி கட்டிக் கப்பல்விட்டுக் கனகங் குவித்த நாட்டின் செல்வ மெல்லாம் கப்பலேறி விடைபெற்றுச் செல்லுகிறது. இருப்பது 36 கோடி, இழப்பது 360 கோடியாயிருக் கிறது. எல்லாம் வெல்லப் பிள்ளையார் பூஜையா யிருக்கிறது.

கல்வியைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை; சத் தம்போடும் புத்தகமூட்டை; கள்விற்ற கஞ்சிப்படிப்பு; அதுவும் காசுக்குதவாது. சுதந்திரமாக ஒரு தொழில் செய்துபிழைக்க வழியில்லை; அயற்கல்வி; அயற்கருத்து; அதுவும் அரைகுறை. நாட்டு வாலிபர் ஏக்கம்பிடித்தலை கின்றனர். கற்றதனாலான பயன் சட்டையுங் கண்ணாடி யும். கற்றதன் பயன் கஞ்சிக் கலைவதா? பள்ளிக்கல்வி புள்ளிக் குதவவில்லை. பொருளாதாரக் கொள்ளை எலும்புருக்கிபோல நாட்டை வற்றடிக்கிறது; பட்ட ணங்களில் இடம்பம், கிராமங்களில் வறுமை. நாட்டின் உயிர்நாடியான கிராம வாழ்வு, கடனுடன் பட்டுக் கலங்கித் தவிக்கிறது. வறுமை, மடமை, அடிமை, பிணி, கவலை, ஏக்கம், தொழில் சோம்பல் இத்தனை பேய்கள் போதாதா நமது இரத்தத்தை உறுஞ்ச. இவற்றின் கணக்கற்ற குட்டிப்பேய்கள் குடியைக்கெடுக் கின்றன. அட, பணமில்லை கல்வியில்லை, ஏழை. என்றால், ஏதோ உழைத்துப் பிழைத்துக்கொண்டு மானமாயிருக்கலாகாதா? குடி, பொடி, புகை, சீட்டு, சூது, கூத்தி, வம்பு, வழக்கு, அடிபிடி, குட்டிக்கலகம், கோர்ட்டு வியாச்சியங்களால் எவ்வளவு பணம் சேத மாகிறது! இவற்றை ஒழித்தால் குடித்தனத்திற்குத்

தட்டில்லாதிருக்கலாமே. ஏதோ ஒரு சைத்தான் இவற்றைக் கொண்டுவந்து மனிதரிடையே புகுத்தி வேடிக்கை பார்க்கிறது. ஒழுக்கத்தைப் பார்க்கப் போனால், ஹரஹரா! அச்சமும், அடிமைப்புத்தியும், தன்னலமும், கடவுளற்ற கல்வியும், தொழிலுறக்கமும், வறுமையும் பிடுங்கித்தின்னும் நாட்டின் மனப்பான்மை எப்படி யிருக்கும்? பசி கிட்டிபோடும்போது பகவன் னுமம் வருமா? நீராகாரம் ஒருவேளையுண்டு, இடுப்பில் அழுக்குக் கந்தை யுடுத்து, ஓட்டைக் குச்சில் வசித்து, நோய் நடக்கம் வந்தாலும் கவனிப்பாரின்றிப் பெண் சாதியும் பிள்ளைகுட்டிகளுமாகத் திண்டாடும் பஞ்சைகள் கோடிக்கணக்காக இந்நாட்டில் உள்ளனர். ஆ, அவர்களை நினைத்தால் இரத்தக் கண்ணீர் வருகிறது. இடுப்பில் ஒரு புடவைதான்; அப்படியே ஊருணியில் இறங்கிக் குளித்து, ஒரு தலைப்பைப் பிழிந்து துடைத்துக்கொண்டு, உலர்த்தி அதைப் போத்திக்கொண்டு, மற்றொரு தலைப்பை உலர்த்தி நிற்கும் கோடானு கோடிப் பெண்கள் இந்நாட்டில் உள்ளனர். ஏராளமான பஞ்சு விளைகிறது. எங்கே போகிறது? நாடெல்லாம் பருத்தி, வீடெல்லாம் அம்மணம். இராட்டினம் உள்ளது; கைத்தறியுள்ளது; கலப்பை யுள்ளது; உழுது பாடுபட்டும் உண்ணச் சோறில்லை. “வயிற்றிற்கில்லை **சாமி**” என்று முதுகு மட்டும் எக்கிக் காட்டும் ஏழைகள் இந்நாட்டில் கோடானுகோடியுள்ளனர். வறுமை, வறுமை, வறுமை!

## 8. இடம்ப நாடகம்.

மற்றொருபுறம், கொஞ்சம் பசையுள்ளவரைப் பார்ப்போம். பணக்காரர் நிலைமை என்ன? நாகரிகப் பச்சைமோகினியின் கைப்பாவையாக ஆடுகின்றனர்: படிப்பு, நடிப்பு, நாத்திகத் தடிப்பு, மோகத் துடிப்பு; உடைமினுக்கு, நடைமினுக்கு; இயல்பான முகத்தைப் பார்ப்பதே அரிதாயிருக்கிறது இலட்சணமாக விபூதி,

சந்தனம், குங்குவம், திருமண் அணிந்தால் மூடப்பழக்கமாம், வைதீகமடிசஞ்சி ஆசாரமாம். அதே முகத்தில் ஏதேதோ ரஸாயனப்பொருள் சேர்ந்து சீமைச்சாயங்களைப் பூசிக்கொண்டால் நாகரிகமாம். சுபமாக மஞ்சட்பூசிய முகத்தில் மினுக்குச் சாயங்கள் பிசுக்கிடுகின்றன. உதட்டில் போலிச்செம்மை. புன்னகைக்கப் போலிப்பல். கண்ணுக்குமேலே கண்ணுடியும் ஒரு உறுப்பாகவே அமைந்துவிட்டது. பல்விளக்கப் பசை, புருஷ். பிறகு முகட்சவரம். அதானதும் அடுத்தது அனுஷ்டானம், வயிற்றுப்பூசை, காப்பி பலகாரம். காப்பிக்கடைக்கும் மருந்துக் கிடங்கிற்கும் குறைவேயில்லை. நூறுபேர் சாப்பிட்ட பீங்கானில் தானும் சாப்பிட்டு வாயைத் துடைத்துக்கொண்டதும், வெற்றிலை பாக்கு, புகையிலை மென்றுகொண்டு பத்திரிகைவிரித்து, சமாசாரக் குப்பைகளைக் கிண்டல். அல்லது ஊர்வம்பு பேசல்; இல்லேல் சீட்டு, சதுரங்கம், கோர்ட்டு விவகாரம். 10, 12 மணிக்குத் தாட்டாகச் சாப்பாடு; உடனே இத்தனை வேலை செய்ததற்காகச் சிரமபரிகாரம். மறுபடியும் சீட்டு வம்பு. உத்தியோகம் உண்டானுல் கவனம் கச்சேரியில். இடைவேளை மறுபடியும் காப்பி பலகாரம்; 5 மணிக்கு ஒருகால வயிற்றுப்பூசை. அதன் பின் பத்திரிகை, வேடிக்கைகள். மீண்டும் இரவில் இலைபோட்டுச் சாப்பாடு. அதன்பின் சினிமா, டாக்கி, நாடகம், சர்க்கஸ்; பிறகு படுக்கை, பலவிதம். இதற்கிடையே, குடிகள் பலவகை, அன்னியவுணவுகள் பலவகை. இப்படிக் கழியும் மாமூல்வாழ்வில் ஆத்மசிந்தனைக்கும், பொதுநலத்திற்கும் மனமேது, இடமேது? இவ்வாறு வாழ்வதின் முடிபென்ன? பிணிசுமந்து அமைதிகெட்டு, மதிகெட்டு, உடல் குலைந்து, நிலை குலைந்து வருந்துவதே. புதுப்புதுப்பிணிகள் நாகரிகத்துடன் ஜோடி சேர்ந்து மனிதனை உண்கின்றன. இளமையிலேயே பார்வை மழுங்குகிறது பல்சொத்தை விழுகிறது, நெஞ்சு கூடுகெட்டுகிறது, மலம் சிக்குகிறது.

தலைவலி, முறைக்காய்ச்சல், விந்தழிவு, சிந்தையழிவு, மூலம், காசம், மேகம் சோகம், வெட்டை, நீரழிவு எல்லாம் தொடர்ந்து வந்து பீடிக்கின்றன. அவற்றிற்குப் பெட்டிபெட்டியாக மருந்து. உடலுறுதியும் உள்ளுறுதியும் அறிவும், ஆற்றலும், ஆன்மவுணர்வும் அளிக்கும் குருகுலக்கல்வி போயிற்று. ஆத்திரத்திற்காக நாத்திகப் படிப்புப் படித்து அருளுமின்றிப் பொருளுமின்றி அலைகின்றனர். வேதோபதேசம் கசப்பு. காதற்கற்பனை இனிப்பாயிருக்கிறது பிள்ளைகளுக்கு. பள்ளிக்கூடத்தில் பரிட்சைக்கவலை. அதானதும் பிழைப்புக் கவலை. படிப்புமுறையோ ஒரே அச்சில் எல்லாரையும் வார்த்து, பத்திரங்களைக் கொடுத்தனுப்புகிறது. பிரம்மச்சரியமில்லாத இந்த அனாத்மக் கல்வியின் தீமைகள் ஆயிரம். பள்ளிப்பிள்ளைகள் தனிமையாகக் கூடிப்பேசுவதைப் பிளேட்டெடுத்துப் பார்த்தால் நமது வாலிபர் எவ்வளவு அபாயமாக ஒழுக்கங்கெட்டிருக்கின்றனர் என்று தெரியவரும். சுசிருசி ஆசாரம், சன்மார்க்கங்கள் நித்யானுஷ்டானங்கள் தர்மஸாதனங்களெல்லாம் தட்டுப்பறக்கின்றன. முகத்தில் தேஜஸ், வர்ச்சஸ், இல்லை. மனிதர் ஒருவர்மேலொருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு எமபுரிக்குப் போகிறது போலிருக்கிறது. நோய் வரிசைகள் பெட்டிபெட்டியாக மருந்துண்டும் விஷப்புல்லுருவிபோன்று இளமையில்ஊன்றி வேர்விட்டு கிளைக்கின்றன. முகத்தில் இயல்பான புன்சிரிப்பு அரிதாயிருக்கிறது. கவலை பெரிதாயிருக்கிறது.

## 9. இல்லறம்.

இப்படிப்பட்ட வாலிபர்கள் நடத்தும் இல்லறம் அல்லற்படவே செய்யும். ஏதோ பசித்தபோது காய் கனி தானியங்கள் கிடைத்தமட்டில் உண்டு, நாலு முழம் உடுத்தி ஒரு இடத்தில் சிவனே என்று இருக்கும் சிலரைப்பற்றிப் பேசவில்லை. பிள்ளைகுட்டிகளுடன்

குடித்தனம் செய்யும் குடும்பியைப்பற்றியே பேச்சு. மனமொத்த, தனமொத்த மங்கல மனை அரிதாயிருக்கிறது. காலட்சேபத்திற்கு கட்டிவரவில்லை கடனுடன் பட்டுக்கவலை சுமக்கிறுன் குடும்பி உப்புக்கும், பப்புக்கும். புடவைக்கும், ரவிக்கைக்கும் ஈடுகட்டவேண்டும். படித்த படிப்பெல்லாம் சோற்றுப் பானையில் வேகிறது வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில். ஒரு தொழிலில் ஒருவன் லாபமடைந்தால் அதிலேயே கும்பல்கூடி அதன் மூச்சைப் பிடிக்கின்றனர் ஒருவன் 'வக்கீலில்' நல்ல சம்பாத்தியம் செய்தால் ஆயிரக்கணக்கான பேர் சட்டக்கல்லூரியை நிரப்புகின்றனர். சிலருக்குப் பேசும் படத்தில் வரும்படிகிடைத்தால் ஆயிரம் போட்டிக் கம்பெனிகள் கிளம்புகின்றன. இதனுல் சில தொழில்களைப் பலர் விரும்பிப் பல தொழில்களை வெறுமையாக்குகின்றனர். ஆள் பிழைத்தால் போதும் என்ருய்விடுகிறது. 'பாரிஸ்டர்' முதல் பலசரக்குச் சுப்பன் வரையில் ஒரே வாணிபம் இதனிடையே பிழைக்கத் தெரிந்தவர் எத்துக்கடைகள் வெகு விநோதம். உண்டுறங்கி ஊடுக்கூடிப்பெற்று வளர்த்துக் கணக்கைத் தென்புலக்கோமான் கையில் ஒப்புவிப்பதே வாழ்வாயிருக்கிறது வாழ்வெல்லாம் வயிற்றைச் சுமக்கும் யந்திரமாயிருக்கிறது இத்தகைய ஜடவாழ்வை மனிதனைவிட விலங்குகள் கவலையற்று நடத்துகின்றன. வாழத் தெரிந்தால் வயிற்றுக்குப்பஞ்சமில்லை. இவ்வாறு நடைபெறும் இல்லறங்களில் உட்புரட்சிகள் வேறு. குடும்பக் கலகங்கள், முரண்கள், கஷ்ட நிஷ்டூரங்கள் எனையவற்றை அனைவரும் அறிந்ததே!

## 10. அரசியல்.

அடித்தபடி அரசியல் வாழ்வைப் பார்ப்போம். வீட்டுக்கவலைக்குமேல், நாட்டுக்கவலையும் தம்மேற் போட்டுக்கொள்வோர், சாதாரண மனிதரை விட

ஒருபடி மேல்; நாற்சுவற்றிற்குள் அடைபட்ட வாழ்விற்குச் சிறிது விரிவு கொடுக்கின்றனர். ஆனால், இப்போது அரசியல் இயக்கங்கள் எவ்வாறிருக்கின்றன? வீட்டைக் கெடுத்தது மதச்சண்டை, நாட்டைக் கெடுத்தது கட்சிச் சண்டை. வெண்ணெய் திரண்டுவரும் போது சட்டி உடைகிறது. ஒரு நல்ல இயக்கம் பயனுறும் தருணத்தில் குபீரென்று ஒரு கட்சிச்சண்டை அல்லது சாதி மதச்சண்டை கிளம்பி மண்ணைப்போட்டு விடுகிறது. பொதுநலத்திற்காகத் தொடங்கியது முடிவில் சுயநலத்தில் முடிகிறது; பட்டம் பதவி வேட்டை, கட்சிப்பெருமை, தலைவர்களுக்குள் சொந்த மனஸ்தாபம், சில்லரைச் சண்டைகள், பிளவு, வசவு, அடிதடிகளில் முடிகிறது. ஐந்துபேர் ஒற்றுமையாகச் சேர்வது அபூர்வமாயிருக்கிறது. சாட்டை கட்டினவன் கையிலெல்லாம் ஆடும் பம்பரமாயிருக்கிறது மாந்தர் மனம். பாமரர்கள் மயங்கும்படி பேசினவனுக்கெல்லாம் ஒரு கட்சி, பத்திரிகை, கிளர்ச்சி! மேடைப்பேச்சுகளில் ஒருவர்மேல் ஒருவர் தொடுக்கும் வசையம்புகளே அதிகமாயிருக்கின்றன. ஒரு சிறிய காரியம் சாதிக்க ஏராளமான பொதுப்பணம் செலவாகிறது. மனித சக்தி அபாயமாக வீணாகிறது. அந்த இயக்கம் அடக்கப்படுகிறது. அதில் முனைந்த அத்தனை பேரும் பலவிதத்தில் வருந்துகின்றனர். எத்தனை இயக்கங்கள் ஒரு ஆவேசச் சூறாவளியில் எழுந்து கூத்தாடி விழுந்துபடுகின்றன! அலைகளின் கூச்சல்தான் அதிகமாயிருக்கிறது; கடல் இருந்தபடியே இருக்கிறது.

## 11. சமுதாயம்.

நமது நாட்டு அருட்புலவரும் தீர்க்கதரிசிகளும், போட்டி பொறாமையின்றி, அவரவர் குணவினைக்கேற்றபடி பாரத ஸமுதாயத்தை அணிவகுத்து அமைத்திருந்தனர். அக்காலத்தில்தான் நாடு செல்வம்

பொழிந்தது, அறிவுங்கலேயும் அசாதாரணமான வெற்றி பெற்று விளங்கின. அக்காலத்தில் எழுதப்பட்ட அருள் நூல்கள் சாகாவரம்பெற்று மனித ஸமுதாயத்திற்கு என்றும் வழிகாட்டுகின்றன. அறிவும் வீரமும், தொழிலும், தொண்டும் முறையாக அணிவகுக்கப்பட்டு சமுதாயத்தைப் போற்றி வளர்த்தன. ஒரு பலாமரத்தில் அடிமுதல் நுனிவரையில் கனிகள் உள்ளன. அடிக் கனிகள் தாழ்ந்தவை, உச்சிக்கனிகள் உயர்ந்தவை என்பதில்லே. எல்லாம் ஒரே சுவை. அதுபோல, ஒரு சமுதாயத்திற்குத் தலே, தோள், மனம், கை, கால், வயிறு எல்லாம் தத்தமக்கு இயல்பான வேலேயைப் போட்டியின்றிச் செய்து, சமுதாய உடலேப்பேணின.

## 12. அந்தண்மை.

அனேத்திற்கும் அடிப்படை அனேத்திலும் உள்ள **ஆன்மா.** அந்த ஆன்மாவை உணர்ந்து அதை எங்கும் கண்டு யாவையும் ஆத்மஸமானமென்றுணர்ந்து அன்பு செய்வதே அந்தண்மை. அத்தகைய அந்தண்மையே மனித சமுதாயத்தின் அடிப்படையாயிருந்தது. அந்தண்மை யென்றால் இங்கு ஏதோ ஒரு சாதியைக் குறிப்பிடவில்லே. அழகிய இனிய தன்மை நங்நீர்மை, அறவழியொழுக்கத்தையே குறிப்பது. வால்மீகி, வியாசர், சூதர், உபநிஷத் ரிஷிகள், அப்பர், வள்ளலார், தாயுமானவர், திருவள்ளுவர், கம்பர் முதலியோர் பக்கா அந்தணர்களே. அவர்களுடைய சாதி எப்படியும் இருக்கலாம். **மகாத்மா காந்தி** அந்தணர்; அந்தண்மை என்பது மிகவும் உன்னதமான நன்னெறி யொழுக்கம். அவ்வொழுக்கம் போற்றுவோர் அந்தணரே. "**வாழ்க அந்தணர்,** வானவர் **ஆனினம்**" என்று சம்பந்தர் வாழ்த்தெடுத்தார். அவர் ஆங்கு சாதியைக் குறிப்பிடவில்லே. அந்தண்மையையே குறிப்பிடுகிறார். வேளாளரான நாவுக்கரசரை "**அப்பரே**" என்றழைத்தார்.

நாயன்மார்களும் ஆழ்வாராதிகளும் முதல்தரமான அந்தணர்களே ; சாதி பலவாயிருக்கலாம். அதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. வர்ணபேதம் தோல்மட்டும். அந்தண்மை ஆன்மாவைப்பற்றியது. இதை நன்கு உணர்க. இப்போது நமது தமிழ்நாட்டில் நடக்கும் சாதிப்போர்களுடன் அந்தண்மையைக் கலக்கவேண்டாம். எனது அனுபவத்தில் பலமத ஆராய்ச்சிக்காகவும், தத்துவ தரிசனத்திற்காகவும், எத்தனையோ இடங்களுக்குச் சென்று, எத்தனையோ பெரியாரைப் பார்த்திருக்கிறேன். கிருஸ்தவரில் அந்தணர், இஸ்லாமியரில் அந்தணர், புத்தரில் அந்தணர், அருகரில் அந்தணர், வேளாளரில் அந்தணர், தனவைசியரில் அந்தணர், திருக்குலத்தாரில் அந்தணர், பார்ப்பனரில் அந்தணரைக் கண்டிருக்கிறேன் ; வணங்கி யிருக்கிறேன். அந்தண்மை ஒருவர் மிராசல்ல. அந்தணன் யார்? தான் ஆன்மா என்ற அறிவு, தன்னுள் ஆன்மவடிவமாக விளங்கும் அருளிறைவனே எல்லாவுயிருள்ளும் கோயில் கொண்டுள்ளான் என்னும் ஸர்வாத்ம ஸமரஸம், ஆணவம், பேராசை, வஞ்சம், பொறாமை, கபடு, சூதற்ற தூய மனம், சித்தசுத்தி, தீயபற்றுகளின்மை, கொலை புலை, குடி, சூத்தி, கொள்ளை, கோதாட்டமின்மை. உயிர்களிடத்தில் பரந்த கருணை, மனமொழிமெய்த் தூய்மை, வாய்மை, அறிவு, அன்பு, அருள், பரோபகாரம், ஒவ்வொரு மூச்சையும் உலகிற்குப் பயனாகும் ஏதாவதொரு தொண்டில் பயனுக்குதல், உள்ளே ஆன்மவுணர்வும், உடலில் ஆருயிர்ப்பணியுமாக உலாவல், பணியின் பலன்களை உலகவடிவான இறைவனுக்கே அர்ப்பணமாக்கல், இன்சொல்லால் மாந்தருக்கு உண்மையான உள்ளின்பத்திற்கு வழிகாட்டல், வாழ்வை சுத்த தர்மஸாதனமாக்கித் தானே அந்தத் தர்மத்திற்கு இலக்காயிருத்தல், எதற்கும் அஞ்சாது. நடுநிலை நியாயப்படி நடத்தல், பகைவரைப்பகையாமல் பழுதைத் திருத்தல், இவையே அந்தண்மை. இத்

தன்மை வாய்ந்தவர் எச்சாதி, எக்குலம், எம்மதம், எந்நாடாயினும் வணங்குகிறோம். அவர்களே மனிதமரபின் கற்பகக்கனிகள் என்போம். இத்தகைய அந்தணரே மனித சமுதாயத்தைத் தாங்கும் வைரத் தூண்கள். அவர்களே மனிதருக்கு வழிகாட்டும் கதிர் மணிவிளக்குகள் வேதரிஷிகள் சுகர், வியாசர், வால்மீகி, காளிதாஸர், புத்தர், வர்தமானமஹாவீரர், ஜாதுஷ்ட்ரர், ஏசுநாதர், மோசை, ரசூலல்லா, அலி, பிரான்ஸிஸ் முனிவர் எமர்ஸன், விட்மன், மாணிக்கவாசகர், நம்மாழ்வார் வள்ளுவர், ஔவை, கோதை, திலகவதியார், அப்பர், சம்பந்தர், திருமூலர், தாயுமானவர், அருணகிரி, அருட்சோதிவள்ளலார், பரமஹம்ஸர், விவேகானந்தர், அரவிந்தர், ரமண மகர்ஷிகள், காந்தியடிகள் முதலிய அந்தண்மையாளரன்றோ உலகின் நாகரிகக் கர்த்தாக்கள். அவர்கள் திருவாக்குகளன்றோ உலகிற்கு ஒளிகாட்டும் அறவிளக்குகள். வானில் கதிரவன், நிலத்தில் அந்தண்மையாளர், இந்த இரண்டு சுடர்களே உலகவாழ்வின் இருவிழிகள். இந்த அந்தண்மையில்லாததால்தான் மேனாட்டின் மூளையும், தசைவலியும் படைகொண்டு மறப்போர் புரிகின்றன. இந்த அந்தண்மையின் முதன்மையைக் கண்டே முற்கால மன்னர்கள் முனிவர்களை நன்குமதித்துப் போற்றினர். முனிவர் எண்ணங்களும், தவக்கனலும் உலகுயிர்களுக்குத் தாய்ப்பாலினும் நன்மை செய்தன. முற்கால நீதிமன்னர் முனிவரைப்போற்றிப் பணிந்தனர். அவர்கள் தவத்திற்குத்தக்க சௌகரியங்களைச் செய்து கொடுத்தனர் அவர்கள் உரையைச் சிரமேற்கொண்டு நடந்தனர். முனிவரும் எக்கவலையுமின்றி, தவவினையே தம்வினையாகி, அத்தவக்கனலால் மன்னுயிர்க்கு நன்மை விளைவித்தனர். ஆயிரம் சொற்பொழிவுகளினும், ஒரு முனிவர் முன் பணிவுடன் மௌனமாக ஐந்து நிமிஷம் வீற்றிருந்து, அந்த நுட்பமான தவக்கதிரில் குளித்தால் வாழ்க்கை பரிசுத்தமாகும், புத்

துணர்வு பிறக்கும். மனம் உட்குவியும். முனிவர் பணி மிகப்பெரிது முனிவர் அந்தண்மைக்கே உலகம் முடிவணங்குகின்றது. அத்தகைய அந்தண்மை எளிதல்ல. தியானம், தவம், யோகம், ஞானசித்தியால் தான் பூரணமான அந்தண்மை வாய்க்கும். அந்தண்மை பேச்சல்ல, படிப்பல்ல, அது ஆத்ம ஸாதனம். அந்த அந்தண்மைதான் வீரம், வாணிபம், தொண்டு அனைத்திற்கும் அடிப்படையாக வேண்டும். அப்பர் உழவாரப் பணிக்கும், ஒரு கூலியாள் பெருக்குவதற்கும் வேற்றுமை காண்க. அந்தண்மை மற்றெல்லாத் தொழில்களையும் போற்றும் தாய். அது குலைந்தது; நமது சமுதாயம் போலிநடையுடைகளால் நிறைந்தது. வீண் வேறுபாடுகள் பெருத்தன. தர்மம் மறைந்தது. மனித வாழ்வே புதுமை பெறவேண்டும். உள்ளிருந்து வாழ்க்கை மாறுதலடைய வேண்டும். அந்தண்மையின் அடிப்படைமேல் சுத்தசுதந்திர சமத்துவ மாளிகையெழுப்பி அதில் மாந்தர் புதுக்குடி புகவேண்டும்.

## 13. பணி.

கடவுட் கலப்புடன் உலகாலயத்தில் அருட்பணி செய்து வாழ்வதே நமது புது வாழ்வு. பணி, உட்பணி, புறப்பணி என இருவகைத்து. மனிதன் சோற்றுத் துருத்தியல்ல; அவன் மனம்; இம்மனத்திரைக்குள் ஒரு ஆன்ம விளக்கெரிகிறது; அதன் கதிர்களினால் தான் கண்கள் காண்கின்றன. அந்த ஆன்ம வொளியைக் கண்டறிந்து அதன் விளக்கமாக வாழ்வை ஆக்க வேண்டும். அதுவே உண்மை வாழ்வு. தன்னடக்கம், தன்னறிவு, ஆத்மசக்தி, அருட்புலமை, அமைதித் திறன், அகத்துறவு மனவொருப்பாடு, தவக்கதிர், கடவுட் காட்சி, கடவுட் கலப்பு இவற்றை வளர்க்க முயல்வதே **உட்பணி**. உணவுடைத் தேவைகளுக்காக ஒரு தீதற்ற தொழில், நற்கல்வி, உடலுறுதி, நல்

லொழுக்கம், அன்பு, பணிவு, ஒப்புரவு, தனக்கியன்ற ஒரு துறையில் டமாரமடிக்காமல் அமைதியாக நிலைத்த பயனுள்ள பொதுப்பணி புரிதல், மனைவி மக்களைக் கருத்துடனே போற்றல், அவர்களைச் சிறந்த வழியில் பயிற்றல், இவையே **புறப்பணி**. இவை இரண்டும் தீர்க்கதரிசிகளான நமது மஹர்ஷிகளால் இல்லற வாழ்வில் இணைக்கப்பட்டன. இப்போது நடக்கும் சீர்திருத்த இயக்கங்கள் மனிதனின் தோலைத் துவைக்கின்றன. ஆன்மாவில் உள்ளாழ்ந்து பாயும் ஆழமான இயக்கங்கள் இவை அல்ல.

## 14. ஸமரஸம்.

மனித ஜாதியை உருட்டிப் பிசைந்து ஒரே அச்சில் வார்க்கும் ஸமரஸ இயக்கம் ஒருக்காலும் செல்லாது. மனிதன் பலவிதம்; உணர்வு பலவிதம்; அறிவின் வளர்ச்சி பலவிதம்; புறவேடங்கள் எப்படியிருப்பினும் மனிதன் எப்படி யுண்ணினும், என்னத்தைப் பூசினும், எங்கு தொழுகினும் ஒரே ஆன்மாவால் இயங்குகிறான். அந்த ஆன்ம வேரில் மனம் ஊன்றினால்தான் **சமரஸமும்** ஒற்றுமையும் உண்மை. அந்த ஆன்ம வேரில் ஊன்றிய மனித வாழ்வு எவ்வளவு கிளை பரந்து எவ்வளவு விதமான கனி பழுத்தாலுமென்ன? எல்லாம் நான் ஆன்மா எனும் உணர்வில் ஒன்றியிருக்கும். வேர் ஒன்று; கிளைகள் பல. ஒரு தோட்டத்தில் பலவகை மரங்களில் பலவகையான பூவுங்கனியுங் குலுங்குகின்றன. பலவகைப் புட்கள் கனியுண்டு பாடுகின்றன. ஒன்றோடொன்று பகைக்கின்றனவா? அதுபோல உலகம் ஒரு தோட்டம். அதில் பலவிதமான மனித ஜாதி பல கனி மரங்கள்போலும். எல்லாரும் ஒரு தோட்டத்தையே அணி செய்கிறோம். நாம் வேரூன்றிய இடம் ஒரே ஆன்மபூமி என்னும் உணர்வு வேண்டும். பிறகு புறவாழ்வில் எவ்வளவு

வேறுபாடுகளிருப்பினும் தோன்றாது. அப்போது ஒரு வருக்கொருவர் புண்படும் சில்லறை வேறுபாடுகளே இரா. ஏனெனில் மனிதன் தன்னைப் போலவே பிறரைப் பார்க்கிறான். தன்னைப் போலவே அனைத் துயிர்களையும் காண்பவனே நற்காட்சியாளன் அத் தகைய அறிவு மலர்ந்த ஞானிகள். நாய், பசு, பட்சி களிடமும் தன்னையே கண்டு ஆன்ம உறவு கலப்பர் இதுவே யோக சமரஸம், ஆத்ம ஸமரஸம். கேவலம் சிலர் கலந்துண்டு கலந்து மணந்தாற்போல இச்சமரஸம் ஏற்பட்டுவிடாது. உணவிலும் மணத் திலும் அததற்கும், அவரவர்க்கும் உரிய இடங்கள் இருக்கவே செய்யும். ஆத்ம சமரஸம் தலைகாட்டினால் இந்த சோற்றுப் பானை விவகாரங்களெல்லாம் வாயை மூடும். அதனால் அனைத்திற்கும் அடிப்படை மேல் தோலுக்கும், வயிற்றிற்கும், கண்டபடி அலையும் சித்தத் திற்கும் அப்பாற் சென்று மனக்கதவைத் திறந்து அத் யாத்மத் தங்கச் சாலையிற் புகுந்து அதன் வளத்தைக் கொண்டு வாழ்வைச் செழிப்பூட்டுவதே. இச்செழிப் பின்றிச் செய்யும் சீர்திருத்தங்களெல்லாம் ஆழ்ந்த பயனைத்தரா.

## 15. குரு.

ஒரு சைதன்ய புருஷன் எழுந்தால் அவனது அன்புப் பெருக்கில் சாதிமத வேற்றுமைகளெல்லாம் அமிழ்ந்து போகும். நாயன்மார்கள் ஆழ்வார்களுக்குள் ஒரே தெய்வானந்தங் கிளர்ந்து புறவேறுபாடுகளை விழுங்கி அனைவரையும் ஒன்றே குலமும் ஒருவனே தெய்வமும் எனும் உணர்வில் கூட்டியது போலவே மனித சமுதாயத்திலும் தெய்வ வொளி பரந்து மனித ஜாதியை ஒரு தெய்வ சங்கமாக்க வேண்டும். அது தான் புதுயுக வீரர் முயற்சி. இந்த ஊன் வீட்டிலுள்ள உள்ளுலகின் அற்புதங்களைக் காணாது, தனது தெய்வத்

தன்மையை அறியாது, தன்னைப் பூரணப்படுத்தும் நினைப்புகூட இல்லாது தற்போது மனிதன் பிறரைத் திருத்துவதிலும், உலகிற்கெல்லாம் நலஞ் செய்வதிலும் புகுந்து புகழ் தேடுகிறான். பொது நலம் வேண்டியதே. எது நலம் என்று முதலில் அறிய வேண்டும். இருவிகாரங்களில் கவலை மூண்டுழலும் மனித ஜாதியின் கண்ணைக் கட்டி ஏதோ ஒரு வேகத்தில் பாவை போல ஆட்டக்கூடாது. மனிதன் முதலில் தன்னைப் பரிபூரணப் படுத்திக்கொள்ள வேண்டும்; பிறகு தனது பூரண வொளியால், ஆண்டவனின் அருட் கருவியாக உலகிற் பணி புரியவேண்டும். தெய்வ அருள் பெற்றவர்கள்தான் உலகிற்கு நலம்புரிய முடியும். மக்களைத் தனக்கு அடிமையாக்காது, இறைவனுக்கு ஆளாக்க வேண்டும். மனிதனைத் தனது பல்லவிக்கேற்பக் கயிறு கட்டியாடும் பொம்மையாக்காது, அவனவனுக்கு இயல்பாக உள்ள சைதன்யத்தைத் தூண்டி, அவனைத் தெய்வ உருவில் வார்க்க வேண்டும். இப்படிச் செய்பவனே உலக குரு; நரதேவன். இத்தகைய மஹாபுருஷன் சிற்பித்த மனிதச் சிலை, தெய்வச் சிலையாகும். அவன் காணும் சங்கம் தெய்வ சங்கம். அதிற் சேரும் பாக்கியம் பெற்றவர்களெல்லாம் மனிதப்படிக்கு மேலுயர்ந்த அதி மனிதர் (Supermen), தெய்வ மனிதர் (God-men). அவர்களே இனி வரும் மனிதர்.

---

II

# இனிவரும் மனிதன்

---

## 16. இரண்டு சக்திகள்.

மனிதனுள் இரண்டு சக்திகள் உள்ளன; அவை ஆத்மசக்தி, தூலசக்தி எனப்படும். ஆத்மசக்தி வாழ்வைப் பூரணப்படுத்துகிறது; தூலசக்தி அதை விரிவுப்படுத்துகிறது. மனித வாழ்வு இருபான்மைத்து. அஃதாவது: (1) தனிவாழ்வு (Individualism), (2) பொதுவாழ்வு, அல்லது, சங்கவாழ்வு (collectivism). இவ்விரண்டும் வளர்ச்சி பெற்றால்தான் பூரண மனிதனாகலாம். இப்போதுள்ள பொது இயக்கங்கள் வெளி மனிதனைத் தலைவிரித்தாடச் செய்து, உள் மனிதனை அசட்டை செய்துவிட்டன. உள் மனிதனே மனிதன்; அவனை வளர்க்காது புறத்தே எவ்வளவு சீருஞ் செல்வமும் பெற்றாலும் மனித வாழ்வு வெம்பி யுதிர்ந்த கனிபோலாகும். ஒவ்வொருவனுக்குள்ளும் ஒரு தெய்வ சக்தியுள்ளது. அதை அடக்கமாக இருந்து வளர்த்து அதன் பயனை தாராளமாக உலகிற்கீந்து அருட்பணி புரிக. மனிதன் தனக்காகவே வாழப் பிறந்தவனல்ல; அவன் கடவுளுக்காக வாழுகிறான். கடவுளை மனிதனுள் விளக்கவே வாழுகிறான். தனக்குள் அடைபட்டிருக்கும் தெய்வசக்தியைத் தெளிந்து அத்தெள்ளூற்றைப் பெருக்கி உலகின் தாகந்தீரப் பாய்ச்சுவதே அவன்பணி. அப்படி ஆத்மபலத்தால் 'நான் செய்கிறேன்' என்ற அகந்தையின்றி, காற்றும் புயலும் கதிரும்போல இயல்பாக வாழ்பவனே இனிவரும் புதுயுக மனிதன்.

## 17. அறிவு வளர்ச்சி.

மனிதன் அறிவின் இடைநிலை. எங்கும் உள்ளது அறிவு; அது கல்லில் உறங்கி, புல்லில் துளிர்த்து, விலங்கில் ஐம்புலன் கொண்டுலவி, மனிதனில் மனமாக விளங்குகிறது. அதற்குமேல் அருளறிவு (விஞ்ஞானம்) உள்ளது. அதை அடைந்தால்தான் மனிதன் தெய்வீகமான சச்சிதானந்த மலை யேறலாம். இயற்கை, மனிதனை இந்நிலைக்கே உந்துகிறது. மனிதனுள் ஏதோ ஒன்று "இன்பம், இன்பம், சக்தி, சக்தி" என்று பசியால் தவிக்கிறது. இந்தப் பசிதான் **ஆர்வம்.** இந்த ஆர்வமே மனிதனைப் பல முயற்சிகளில் ஈடுபடுத்துகிறது. இப்போது அம்முயற்சிகள் எல்லையற்றுப் **புறத்தே** விரிந்து மனித சக்தியைச் சில்லரை யாற்றிச் செலவிடுகின்றன. முயற்சியை உள்ளே திருப்பி சக்தியை உள்ளே பெருக்கி உள்ளே பழுத்தால், அந்தப் பூரணக் கனியே உலகில் இன்ப மணம் பரப்பும். வாழ்வு தலைகீழாக வளரும் ஒரு அரசமரம் போன்றது. அது உண்மை யறிவின்பத்தில் வேரூன்றிக் கீழே விஞ்ஞானத்தில் அடிமரமும், மனத்தில் கிளையுமாக விரிந்து, தூல வாழ்வாகத் துளிர்க்கிறது. ஆதலால் உண்மையான மனிதன் சச்சிதானந்தச் சிகரத்திலுள்ளான். அவனே மனிதனுக்குள் உள்ள கடவுள்.

## 18. அதி மனிதன் வாழ்வு.

இனிவரும் மனிதன் அக்கடவுளுடன் இணைந்து தெய்வ மனிதனாக வாழுவான். அவன் புறத்துறவி யல்ல; உலகை, மாயை, கனவு, கானல் என்று வெறுப்பவனல்ல; உலக வாழ்வை அவன் அணுவிடாமல் வெற்றி வீரன் போலத் தன்னலப்பற்றின்றி, அனுபவிப்பான்; ஆனால் செயல்களும்,பயனும் அவனைப் பற்றா. ஏனெனில் அவன் தன்னலச் சுகத்தைத் தேடு

பவனன்று. அவன் சுகதுக்கம், முக்குண வேறுபாடு களைக் கடந்த குணாதீதன். அவன் உயிர்க்கும் கீதை; நடக்கும் அருட்பா. அவன் உலகை இறைவனுக்காக வெல்லுவான். ஆனால் அசுரனைப் போல உயிர்களைக் கசக்கிப் பிழிந்து இரத்தந் தோய்ந்த போகசுகங்களை விரும்பான். அவன் ஞான வீரன், தர்ம வீரன், கர்ம வீரன்! மண் வெறிபிடித்த வாள் வீரனல்ல. வாள் வீரர் ஆக்கிய இரத்த வெள்ளத்தால் மனிதான்மாவின் நீண்டதாகந் தணிந்ததா? வாளால் வென்ற அரசு வாளாற் சென்றது. கண்ணனும் புத்தரும் யேசுநாதரும் ஆக்கிய தர்மராஜ்யம் இன்று மனித ஜாதியின் உள்ளத்தில் வேரூன்றி வளர்கின்றன. ஒரு கண்ணன், ஒரு புத்தன் காணாது. 150 கோடி மக்களும் பூரணக் கண்ணனாக, புத்தனாக வேண்டும்.

மனிதனில் இரண்டு தத்துவங்கள் உள்ளன; (1) இயற்கை க்ஷேத்ரம், நிலம். (2) க்ஷேத்ரக்ஞன், அறிவோன், ஆன்மா. க்ஷேத்ரக்ஞனே உன் உள்ளத்திலுள்ள வானரசின் (Kingdom of Heaven within you) மன்னன். உடல் அவனது திருமாளிகை; அந்தக்கரணம் அவன் மந்திரிகள்; ஐம்புலக் கதவு வழியாக அவை உலகை யறிகின்றன. புதுயுக மனிதன் தன்னை ஆன்மா க்ஷேத்ரக்ஞனென்று அறிந்து அவ்வுணர்வில் இயற்கையுடன் கூடி வாழ்வான்.

## 19. இயற்கையை அஞ்சான்.

இயற்கையை அவன் மாயை என்று வெறுக்க மாட்டான்; அதன் பயங்கரவடிவைக் கண்டு அஞ்ச மாட்டான். உருத்திரக் காளியின் ஊழிக் கூத்தும், மஹா லக்ஷ்மியின் அழகமுதப் புன்னகையும் சமமாகவே காண்பான். எதையும் அவன் வெறுக்க மாட்டான்; எதையும் வலுவில் பற்றமாட்டான். ஒவ்வொன்றின்

ரஸத்தையும் அவன் நுகருவான். உலகன்னையை அவன் மகா சக்தி யெனப் பணிவான். அவளுக்குத் தன் வாழ்வை வேள்வியாக்குவான்—புகழுக்காக இல்லை, 'நான் எவ்வளவு தியாகம் செய்கிறேன்; பார்' என்னும் செருக்குடன் காட்டுவதற்காக இல்லை—அவளுக்காகவே அவன் வாழுகிறான்; அவள் கடவுளின் இச்சா சக்தி; அவள் ஞான மஹேஸ்வரி, வீரமாக் காளி; அழகும் இன்பமும் தரும் மஹா லக்ஷ்மி; அல்லும் பகலும் உழைத்து நம்மைப் பூரணமாக்கும் மஹா ஸரஸ்வதி. அவள் ஆதி சக்தி; அவள் வடிவாக, அவளுடைய சக்திக்கனலாகவே அவன் பெண்களைப் பார்ப்பான். பேராசையும், காமவெறியும் அருமையும், பொறாமையும், பொய்யும், தன்னலமும், வீண் இடம்பமும், பொறாமைகொண்டு பிறரைக் குத்திப் பேசுவதும், எழுதுவதும், வெளிப்பகட்டும், 'தனக்கே வேண்டும், தானே வாழ வேண்டும்' என்று பிறரை அழிக்கும் அசுரத்தனமும் அவனிடமிருந்து விலகி நிற்கும். அவன் அனைவர்க்கும் இனியன்; ஆனால் தெய்வ இச்சையை, மஹா சக்தியின் ஆணையை அச்சமின்றி, இருவிகாரத்தடையின்றிக் கூசாமல் புரிவான். அவன் அன்பு, பாச அன்பல்ல; அது பதியன்பு. அவன் இரக்கம் கோழையின் இரக்கமல்ல; அது புண்ணாற்றும் புலவனின் இரக்கம். தாய் தன் குழந்தை மீதுள்ள அன்பினால் ஒருநாள் விருந்தூட்டுகிறாள்; இன்னொருநாள் கசப்பான மருந்தூட்டுகிறாள். இன்னொரு நாள் குழந்தையின் புண்ணை அறுக்கிறாள். இம்மாதிரி மஹா சக்தி தனது உலக மக்களை எவ்வாறு முன்னேற்ற விரும்புகிறாளோ அவ்வாறு அவளிச்சையின் கருவியாகவே தெய்வ மனிதன் பணி புரிவான். அவனுக்குத் தலைவன் பரம பரிபூரணனான சுத்தன், இறைவன். சக்தி மஹேஸ்வரன். அவனது தெய்வம் சுத்த சக்தி. அவனது தர்மம் சுத்த முக்த ஸமத்வ சக்தி தர்மம்.

## 20. கனல் மேனி.

இனி வரும் மனிதன் அதி மனிதன். அவன் தன்னையே உலகிலும், உலகையே தன்னிலும் காண் பான்; சாதி சமய வேறுபாடுகள் அவனடிவைத்த இடங்களிற் கூட இரா. மனித மூளையால் ஏற்பட்ட சட்ட திட்டங்களில் அவன் கட்டுப்பட மாட்டான். அவன் தனது அந்தராத்மாவின், மனச்சாட்சியின் ஆணைப்படியே அச்சமில்லாது நடப்பான். அவனது தூய அந்தக் கரணத்தில் ஆண்டவன் பேசுவான். அவ னது தூய நாடிகளில் மஹாசக்தி அபாரமான பலத்தை ஊக்குவாள். அவன் உடலும் ஆன்மாவைப் போலப் பூரண வளர்ச்சி பெறும்; அவனது உடல் கண்ணாடி விளக்குப் போல உள்ளொளியைக் காட்டிச் சிறகாந்த விளக்காகக் கதிர் வீசும். குண்டலி சக்தி, பிரம்மா காரம், என்று பலவிதமாகச் சொல்லும் மஹாசக்தி அவனுள்ளே விருவிருவென்று சுழன்று அவனைச் சுற்றிப் பரவும். அவனருகே நின்றால் கணகணவென்று தெய்வக் கனல் வீசும். அதை ஒவ்வொருவரும் உண ரலாம். அவனைச் சுற்றியுள்ளவர்களெல்லாம் அக்கனலை யுணர்வர்.

## 21. யோகி.

அவன் மஹாயோகி; அவன் யோக யுக்தன்; எக்காலத்தும், எதைச் செய்தாலும் யோகமாகவே செய்வான்; யோகம் என்றால் இறைவனுடன் இணை பிரியாது உள்ளுணர்வில் கலந்திருத்தல். அதுதான் திருவடிப்பற்று, உள்ளத்தைத் தொட்டு நிற்றல் என் பது. அவன் வாழ்வு முழுதும் இறைவனுடன் கலந்து புரியும் யோகம். யோக மென்பது உடலை வளைத்துக் குடலைக் குலுக்கி, மூச்சைப் பிடித்துக் கட்டை மாதிரி உட்கார்ந்திருப்பதல்ல. இவை யெல்லாம் மனத்தை யும் உடலையும் வசப்படுத்த ஒருவழி. ஹடயோகம்

ஆசனங்கள், பஸ்தி (எனிமா), தௌதி (இரைப்பையில் மண்டியிருக்கும் பித்த நீரை வெளியேற்றல்), ஒட்டியாணம், நௌலி, பந்தம், முத்திரை, ப்ராணாயாமங்களால் உடலுறுதியும், இளமையும், நீளாயுளும் தரும். **ராஜயோகம்** நன்னினைவு, நல்லொழுக்கம், உறுதியான ஒரு ஆஸனம், வாசியடக்கல், ஒரு மனப்பாடு, உள்முகப்படல், உள்ளே கலந்திருத்தல் முதலியவற்றால் ஒளியும், கனலும், உள்ளறிவும் பல அற்புத சக்திகளும் அளிக்கும். மனங்குவிதல், ஒருப்பாடெய்தல், ஈரற உட்கலத்தல் ஆகிய ஸம்யமத்தால் நினைத்த சித்தியை எய்தலாம் (இதன் விவரம் பெரியார் வரலாறு, எமது யோக நூல்களிற் காண்க); **ஞானயோகத்தால்**, **கோஹம்** (நானூர்) எனக் கேட்டு, நாஹம் (நான் இது வல்ல) என ஒதுக்கிச் சென்று, முடிவில் **ஸோஹம்** (நான் அவன்). **ஆன்மா** எனும் உள்ளறிவைப் பெறலாம். **பக்தி** யோகத்தால் என்புருக அன்பு செய்து இன்பக் காதலனை இறைவனைக் கூடலாம். தந்தை தனயன், தாய், சேய், ஆண்டான், அடிமை, நண்பன், உரிமையாளன் முதலிய எந்த பாவனையாலாவது இறைவனுடன் மனிதான்மா கலக்கலாம். பக்தன் ஞானியைப் போலக் கடவுளாக விரும்பான்; அவன் கடவுளருளை, கடவுளின்பத்தை, கடவுளழகை, கடவுட் சுவையை வேண்டுவான். அவன் கனியாக வேண்டான்; கனிச் சுவையே அவனுக்குப் போதும். **கர்மயோகி** கடவுளைத் தனது தலைவனுகக் கருதி, அவன் ஏவலைத் தலைமேற்கொண்டு புரிவோன். அவனுக்கு எஜமானின் புன்னகை போதும். முதல்வனுக்காக இதைச் செய்கிறோம். நமக்காக அல்ல எனும் உணர்வு பற்றிப் பணி, பயன் இரண்டையும் அவனுக்கீந்து, அவனையே சரண் புகுந்து கர்மயோகி அவனுக்கே வாழ்வை வேள்வியாக்குகிறான். **தாந்த்ரயோகி** இயற்கையை அஞ்சி ஓடாது அதைப்பற்றி வெல்கிறான். சக்தி, இன்பம் இரண்டே அவன் விருப்பம். இவ்

வாறு இயங்கும் யோகப் பயன்களெல்லாம் அடங்கிய **பூரணயோகியே இனிவரும் தெய்வ மனிதன்.**

## 22. அதி மனிதன் செயல்கள்.

இறைவனுக்குத் தன் வாழ்வை முற்றும் நிவேதித்து, அவன் கழல் புகுந்து தியானத்தால் உள்ளுறவு பேணி, அவனது அருட்பொழிவைப் பெற்று, அவனிச்சையை உலகில் நிறைவேற்றுவான். இறைவனுணையின்றி அவன் வாழ்வில் ஒரு அணுவும் அசையாது. அவன் உள்ளே பேசுவதை அவன் உரையால் விளக்குவான்; தனது பண்டிதப் புலமையைக் காட்ட அவன் தடபுடலாகச் சொற்பொழிவுகள் ஆற்றான். கடவுட் பெருமையும், கடவுளறமும், கடவுட்பேறும், அவன் மொழிகளில் இனிது, எளிது முரலும். அவன் எண்ணங்கள் எல்லாம் திருவருட் கடலின் பொன்னலைகள். அவை நதியாக வெளிப்போந்து மானிடப் பயிரை வளர்த்து அமுதக்கனி பழுக்கச் செய்யும். அவனது செயல்கள் அருள் வல்லபத்தால் நிகழ்வன. "நான் செய்தேன், செய்கிறேன்" என்ற உணர்வே அவனுக்கிராது. "என்னைக் கருவியாகக் கொண்டு இறைவன் தனது இச்சையை நிறைவேற்றுகிறான்" என்றே அவன் கருதுவான். அச்செயல்களின் நலந்தீதில் அவன் கட்டுப்படான். அவன் மனம் இறைவனிச்சையே. அது புலன்களுக்கு அடிமைப்பட்டிராது. காணுமுலகிற்கு அவன் அடிமையல்ல. அவன் எல்லாம் வல்ல இறைவனின் இளவரசன்; அவன் உலகை ஆளப் பிறந்தவன்; உலகை அவன் அஞ்சான்; உலகம் அவனைக் கட்டுப்படுத்தாது. அவனைக் கண்டவுடன் தம்மை யறியாது உலகோர் மனதில் ஒரு வணக்கமும், 'இவன் நமக்கு தலைவன், இவனைப் பின்பற்றினால் நலமுறுவோம்; நமது வாழ்வு இவன் பணிக்காகுக' என்ற ஒரு புதிய உணர்வும் இயல்பாக

எழும். அவன் மௌனமாக நின்றாலும், அவனுடைய தெய்வப் பொலிவும், மாசற்ற திருமுகமும் அவனது கருத்தைப் பேசிப் புகட்டும். அவன் வெளியே வருவது தன்னை விளம்பரப் படுத்திக் கொள்ளவல்ல; இறைவனிச்சையை நிறைவேற்ற. அதற்காக அவன் எப் பணிபுரியினும் இழிவு, உயர்வு, பெருமை, சிறுமை பாராட்டான்.

இனிவரும் தெய்வ மனிதன், மஹா தீரனாயிருப் பான். உலகின் சலசலப்புகளுக்கு அவன் அஞ்சான். போர் முனையிலும் அவன் இறைவனுடன் உள்ளே கலந்திருப்பான். இடது கன்னத்தில் கொடுத்தால் வலது கன்னத்தையும் காட்டும் சாத்வீகத்தை அவன் வெறுப்பவன். அவனை யார் துணிந்து அடிப்பர்? அவன் பீமகாந்தி யுள்ளவன்; கொடியவர்க்குக் கூற்று வன். அவன் சாதாரணமான மனிதரினும், எத்த னையோ பங்கு பலசாலி, அற்புத சக்திகள் வாய்ந்தவன். அவனை யார் சிலுவையிட முடியும்? யார் அவனுடன் போராடி வெல்லமுடியும்? அவனது பலம் மஹா காளியின் பலம். ஆனால் அவன் அசுரனல்ல; மனித சமுதாயத்தின் புண்களை ஒரேடியாகக் கீறியெறிவ தற்கே அவன் காளியின் உக்கிரவலிவுடன் போராடு வான். அறிவாளிகள் அவனது உக்கிரத்தை அன் பின் தீவிரமென் றறிவர். அத்துடன் அவன் மனித சமுதாயத்தை முற்றும் புதிதாய் அமைப்பான். பழைய நலன், புதிய நலன் இரண்டும் அவனது புனர் நிர்மா ணத்தில் பொருந்தியிருக்கும். கடவுளரசை உலகில் நாட்டி, யோகத்தைப் பொதுவாக்கி, ஜாதி மத சாத் திர கோத்திர வேற்றுமை விகாரங்களை அடியோ டொழித்து, சுத்தான்ம சமரஸத்தில் அனைவரும் தத் தம் உள்ளத்திலுள்ள இறைவனுடன் ஈரறக் கலந்து வாழவே அவன் அல்லும் பகலும் அரும்பாடுபடுவான். இதுவே அவனது வேலை.

## 23. வெற்றிப் பயன்.

அவனது தெய்வீக முயற்சி வெற்றி பெற்றால் மனித ஜாதி முழுதும் கடவுளின் உடலாகும்; அனைத்திற்கும் உயிர் இறைவனுவன்; மனிதன் மனிதத் தன்மைக்கு மேலே சென்று தனது ஆன்மாவைக் கண்டு தெய்வத்தன்மை பெறுவான். எனது தேசம், எனது ஜாதி, எனது மதம், எனது ஆசாரம், எஞ்சாமி, உஞ்சாமி என்று இருமாந்து, பிரிந்தும் பிரித்தும் மனித சமுதாயத்தை வேற்றுமைக் கந்தலாக்கி, உலகை இரத்தகளமாக்கும் சிறுமைகளெல்லாம் ஒழிந்து, மனிதஜாதி முழுதும் அந்தராத்மாவான தெய்வத்துடன் கூடி வாழும் ஒரு தெய்வ சங்கமாகி, சுத்த முக்த ஸமத்வானந்தத்தில் வாழும். அப்போது பிறர் தமது மனப்போக்கின்படி விதித்த புறவிதிகளிற் கட்டுப் படாது, தன்னுளெழுந்த ஆத்ம தர்மப்படி ஒவ்வொருவரும் நடப்பர். அதனுல் சுதர்மம் பாதர்மத்திற்கு அடிமைப்படாது. உள்ளே ஆழ்ந்து பார்த்தால் எல்லாருக்கும் இசைந்த ஒரு பொது நிலையறம் விளங்கும். கடவுட் கலப்பு, ஆருயிரன்பு, தானுகவே உலகைக் காணல், இறைவனிச்சை புரிதல், அச்சமின்மை, ஆத்மத்யானம், தூய்மை, வாய்மை, அருட்பணி இவை அவனது கோட்பாடுகள். மனச் சாட்சியே அவனது அருமறை நூல். அருட் புலமையால் அவன் யாவையும் அறிவான். அவன் செயல்களால் உலகம் விண்ணுகும்; மண் பொன்னுகும், மானிடம் தெய்வ வடிவாகும்.

## 24. ஆண் பெண்ணுறவு.

மனிதன் சிவமயனுவான், மனிதி (பெண்) சக்தியாவாள். ஆண் பெண்ணுறவு பொன்னும் நகையும் போன்று அருளழகு பொலியும். பெண்ணின்றி

ஆணுக்கு விளக்கமிராது; ஆணின்றிப் பெண்ணிற்கு இருக்கையிராது.

இப்போது நமது சமுதாயத்தை இழிவுறுத்தும் பெண்ணடிமை அடியோடு ஒழியும்; பெண் சக்தி வணங்கப்பெறும், இறைவனும் இயற்கையும், சிவனும் உமையும் போன்று, ஆணும் பெண்ணும் உட்கலப்புடன் ஒருவரையொருவர் உயர்த்தி வாழுவர். அவர்களுடைய காதல் ஆன்மக்காதல், காமவிகாரமல்ல; அவர்கள் ஆன்மப் பற்றால் ஒருவரை யொருவர் கண்டறிந்து உள்ளொன்றி வேறு எவ்விதமான புறச் சடங்குகள், இடர்க் கட்டைகளின்றி சுதந்திரமாகக் கூடி வாழுவர்; நாதமும் விந்தும் ஓஜஸூம் தேஜஸூமாக மாறும். பெண்ணிடம் கேவலம் உடலின்பத்தை மட்டும் கருதமாட்டான்; பெண்ணிடம் கனலும் மூல சக்தியை அவன் வழிபடுவான். ஆணிடம் பெண் கேவலம் இந்திரிய சுகத்தை மட்டும் எதிர்பாராமல், ஆத்ம ப்ரகாசத்திற்காக ஆத்மானந்தத்திற்காக அவனுடன் இணைபிரியாது வாழுவாள். சிவன் மங்கை பாகஞன இரகசியம் இதுதான். இதை விளக்கவே நமது பெரியோர்கள் தெய்வ வடிவங்களை அமைக்கையில் சக்திகளையும் சேர்த்தமைத்தனர். சக்தி சந்நிதியின்றிக் கோயில்கள் கட்டுவதில்லை. இந்த சிவ சக்தி ரகசியத்தையே கோயில்களில் வடிவாகச் செய்து வைத்தனர் நமது பெரியோர்கள். அக்காலத்து மஹரிஷிகளும், முனிவர்களும் தூய பத்னிகளுடன் வாழ்ந்த பண்பும் இதுவே. இந்த அற்புதமான ஆத்மப்ரகாசத்தை ஆணிடம் பெண் கண்டால் பெண்ணின் அன்பு ஆயிரம் மடங்கு அதிகமாகும். பிறகு இருவரும் ஒருவருள் ஒருவர் வாழுவர்; இருவருக்கும் உயிர் ஒன்று, அன்பு ஒன்று, வாழ்வு ஒன்றாகும். இதைத்தான்

“ காதல் இருவர் கருத்து உறவைத்து ஆதாவு பட்டதே இன்பம் ” என்றுள் ஔவை. இத்தகைய இல்லறமே நல்லறம். இதுதான் காதல் மணம் என்பது.

உள்ளத்திற் பற்றி யுணர்விற் கலந்தவளர்
ஒள்ளியர்க்கு விண்ணும் உலகு.

## 25. பொது வாழ்வு.

உலகில் எவனுக்கும் தனிச் சொத்திராது. எல்லாம் திருவருளுடைமை. பரிபூரணனுக்கு அவரவர் புலமையும் திறமையும் அடைக்கலமாகும். அனைவர் பணியும் பயனும் எந்தத் தனி மனிதனுக்கும் அடிமைப் படாது நேராக இறைவனுக்கே நிவேதனமாகும். திருவுளப்படி அனைவருக்கும் அவன் படியளப்பான். யந்திரத்தில் கோடிக் கணக்காக ஆடைகளைக் குவித்து ஏழை நாடுகளைச் சந்தையாக்கித் தனக்கே குவிக்கும் தன்னலப் பணம் இராது. ஒருவன் ஆடைகள் நெய்தால் நேராக நமது தெய்வீக அரசனுக்குச் சேரும். எவரெவர்க்கு ஆடைகள் தேவையோ அவரவர்க்கு அவன் நேராக அளிப்பான். [இங்கே தெய்வீக அரசன் என்பது தேவசங்கத் தலைவன் எனக் கொள்க.] தடி யெடுத்தவனெல்லாம் தண்டற்காரனாக முடியாது. எல்லாரும் அவனிச்சைக்கு அடங்கியே நடக்க வேண்டும். அவனின்றி எவ்விதமான அருமை பெருமையும் உறவும் துணையும் எவர்க்கும் இராது. அவரவர் திறமைக்கும் இயற்புலமைக்கும் ஏற்றபடி ஒரு நாளைக்கு சுமார் 4 மணி நேரம் வேலை செய்ய அவன் பணிப்பான். அவ்வேலை சங்கம் முழுதிற்கும் நலமாகும். இங்கே ஒவ்வொருவரும் சங்கத்திற்காகவே வாழுவர்; சங்கம் ஒவ்வொருவர்க்காக வாழும். ஒருவர் பணி சங்கம் முழுதிற்கும் பயனாகும். சங்கப்பணி ஒவ்வொரு

வர்க்கும் பயனும். இறைவன் தலை; மஹா சக்தி உள்ளம்; சங்கம் அவர்கள் உடல். நமது அந்தக் கரணத்தை கருவியாகக்கொண்டு இறைவன் தனது இச்சை புரிவான். அவன் திருவடி நிழலில் தெய்வ சங்கம் வாழும்.

## 26. சாதனம்.

அன்பனே, இத்தகைய தெய்வ மனிதனாக வேண்டுமோ? இங்கேவா, கீழியல் வியாபாரங்களை ஒழி; ஆரவாரங்களையும், பரபரப்பையும், துடிதுடிப்பையும், தற்பெருமையும் ஒழி. நீ பூரணமாகு முன் வாயைத் திறவாதே. இறைவனிடம் உன்னை ஒப்புவி; இவ்வுலகை நீ தாங்கப்போவது போலப் பாயாதே. இவ்வுலகம் தெய்வ சக்திக் கோயில். உன்னைவிட மஹா சக்திக்குத் தனது உலகைக் காக்க நன்கு முடியும். "தேவீ நான் குழந்தை போல உன்னை யடைந்தேன்; என்னை யேற்றுப் பரிபூரணமான குழந்தையாக்கு; உனது சக்திக் கனலைத் தந்து உனது இச்சையை நிறைவேற்றவே வாழ அருள்!" என்று வேண்டு. அவளுடைய தங்கக் குழந்தை யாயிருப்பதைவிட உனக்கு வேறு பெருமை யுண்டோ? உனது அகங்காரப்படி எதையும் தீர்மானிக்காதே. அவள் உன்னைச் சிலகாலம் "பேசாதிரு; எதுவும் செய்யாதே; யாவருடனும் கலக்காதே" என்றால் அந்த ஆணையையும் சிரத்தையுடன் நிறைவேற்று "இப்போது உலகில் போய், இன்ன காரியம் செய்" என்றால் "தேவீ உனது சக்தி இக்கருவியின் மூலம் செயல் புரிக" என்று வணங்கிச் சென்று பணி செய். பணியில் உனது புகழைக் கருதாதே. அதன் பயன்களை அவளுக்களி. எப்போதும் நிலையின்றி, குரங்கு போலத் தாவிக் குதிக்கும் அற்ப மனத்தால் அவளைக் காணாதே. "தேவீ, உனது உண்மை யொளியை

எனக்குக் காட்டு; உன்னருளால்தான் உன்னைக் காண வேண்டும். என் சிறுமதியை அடக்கி உன்னிச்சை எளியேனை இயக்குக" என்று வேண்டு. விஜயன் கை யம்பும், வீரன் கை வாளும் போன்று இறைவன் கையில் நீ இரு. வாளை வீரன் வீசிப் போர் புரிவான். போரில் அது ஒடியும், அல்லது போர் வென்று வாகை புனையும்; பிறகு அது உறைக்குள் உறங்கும்; எல்லாம் வாளுக்கு இன்பமே; இறைவனிச்சை உன்னை இயக்கட்டும். நீ யந்திரன்; அவன் யந்திரி. உன் மனச் சஞ்சலத்தை அடக்கு; மனத்தை இறைவனடியில் கட்டு, உன்னிடமிருக்கும் குறைகளை நாளைக்கு ஒரு மணி நேரம் உட்கார்ந்து ஆராய்; ஒரு குறிப்பில் எழுதிவை. ஒவ்வொரு குறையாக ஆராய்ந்து நீக்க முயல். நீக்க முடியாவிடின் இறைவனிடம் முறையிடு! அவனருளைக் கூவியழை. அவன் மூச்சினும் அருகேயுள்ளான். நீ பேசவில்லை; அதனால் அவன் பேசவில்லை; நீ காணவில்லை; அதனால் அவன் தன்னைக் காட்டவில்லை; நீ நினைந்துருகவில்லை; அதனால் அவனது திருவுளம் பற்றவில்லை; நீ அழைக்கவில்லை; அதனால் அவன் வரவில்லை. அவனை நம்பிக்கூவு:—"இறைவனே உனது அருட்பணிக்காக என்னைப் பரிபூரணப் படுத்து" என்று வேண்டு. செய்வதெல்லாம் அவனுக்கு வழிபாடாக்கு. உனதியல்பு விரும்பும் ஒரு நல்ல கலை, தொழிலைப் பயில். அதனால் சங்கத்திற்கு உதவு. உன் சொந்தப் புகழுக்கோ பெருமைக்கோ எதுவும் செய்யாதே. உனக்கும் உனது விருப்பங்களுக்கும் இடையே தெய்வ சக்தியை வை; "நான் செய்கிறேன்" என்றால் நீதான் செய்ய வேண்டும். அதன் பலன்கள் உன்னைப் பற்றும். "இறைவா, நீ என்னை இயக்கு; என்மூலம் செய்; உன்மனம் ஆகுக" என்றால் அவன் உன்னை நடத்துவான்; அவன் சக்தி உன்னைத் தூண்டி வெற்றியுடன் செயல் புரியும். இந்தக் கர்ம ரஹஸ்யத்தை அறி. (இதன் விரிவு கீதை காட்டும்

பாதையிற் காண்க.) ஒவ்வொரு நிமிஷமும் உன்னைச் சோதித்துக் குறை நீக்கி அணுவணுவாக நிறைவுறு. மனிதா, இனி வரும் பூரணமான தெய்வ மனிதனுக வேண்டுமாயின் உன்னிடத்திலுள்ள தெய்வத்தை முதலில் தேடு.

அதற்கு உனது அகந்தையை ஊனுக்கு ;
அதன் உணர்வில் வாழ ;
அதுவே யாவாய் !

ஓம் தத் ஸத்.

---

# III. அருள் வேட்டல்



## கவிதைகள்

I. அழகுத் தெய்வம்.

II. புதுயுக மைந்தரைத் தா.



— சு. சு. பாரதி.

௳.

# I. அழகுத் தெய்வம்

1.

கார்ப்புயலை வெட்டுகின்ற
கம்பிமின்னல் போலே
கவலையிரு ளோட்டியென்னைக்
கண்பார்த்து நின்றாள்.
யாரென்றே யதிசயித்தேன்!
அழகுமணித் தெய்வம்!
அன்னைசக்தி வாழ்கவென்றே
பொன்னடியிற் பணிந்தேன்.

2.

அன்புசொல்லித் தழுவியெனக்
கானந்தந் தந்தாள்!
ஆர்வமுள்ள குழந்தையென
மார்பகத்தில் உண்டேன்.
என்புருக நைந்துருகி
என்மகனே யென்றோர்
இன்பநகை புரிந்ததவும்,
எங்கெங்கும் இருந்தாள்!

3.

காவலமலர்த் திருமுகத்தில்
கருவணயமு தீந்தாள் ;
கத்துகுயி லோசையிலே
பத்தியங்கள் படித்தாள் ;
சோவலமலர்ப் பொலிவினிலே
சொக்குநகை புரிந்தாள் ;
சுரும்புகளின் பாட்டினிலே
சுருதியெனக் கீந்தாள் !

4.

பளபளக்கும் பச்சைவளக்
கம்பளத்தின் மீது
பாய்ந்தாட மாடுகின்ருள்
பண்ணருவி பாட ;
உளமகிழத் தென்றலிலே
இளந்தமிழ்யாழ் மீட்டி,
உருக்குகின்ருள், இன்பவெறி
பெருக்குகின்ருள் அன்ன !

5.

உள்ளத்தில் மாசிருந்தால்

மெல்லவில கிடுவாள் ;

ஒள்ளியநல் லன்பருக்குத்

தெள்ளமுத மாவாள் ;

கள்ளங் கரவிருந்தாற்

காறியுமிழ்ந் திடிப்பாள் ;

காதல்கொண்ட தூயவரை

வீதலின்றிக் காப்பாள்.

6.

ஏராளப் பணக்குவையில்

ஏமாந்து நில்லாள் ;

ஏமாற்றுங் காமுகரை

எற்றிவிலக் கிடுவாள் ;

பாராளு வோர்க்குமிவள்

தாராள மாகாள் ;

பரிசுத்த யோகியரைத்

தரிசித்து நிற்பாள் !

---

## II. புதுயுக மைந்தரைத் தா.

நொண்டிச் சிந்து.

1.

புதுயுக மனிதரைத் தா—சக்தி
போற்றி யுன் பொன்னடி புகலடைந்தேன்.
மது வளர் புன்னகையால்—என்
மதிவிளக் கேற்றிய சுதி ரொளியே,
முது பெரு முலகினிலே—கோடி
முரண்களும் பிரிவினை முடிச்சுகளும்
சதி செய்துன் மதலைகளைக்—கடுஞ்
சாவினுக் கிரைதரச் சம்மதமோ?

2.

வந்தருள் பரசக்தி,—உன்னை
வஞ்சமில் லாதொரு வரங் கேட்டேன்.
தந்தருள் வல்லபியே—பதந்
தஞ்சமென் றடைந்தவர்க் கஞ்சலியே.
சிந்தையிற் கலந்தவர்க்கு—யோக
சித்திக ளாயிரந் தருபவளே,
இந்த மண் ணுலக மெல்லாம்—சோதி
இன்பவிண் ணுகுதற் கிசைந்திடுவாய்!

3.

காரிருள் மடமை யிலே—சுடு
கஞ்சிக்குப் பரந்திடும் பஞ்சைகளை,
பாரினிற் படைக்காதே—பிணி
படுதுயர்க் கூண்டினி லடைக்காதே.
தீரரை யேபடைப்பாய்—அவர்
சிறு தொகை யென்னினும் பெரும் பயனும்.
நாரிய ரனைவரையும்—சக்தி
நல்கிடுங் கனலென மாற்றிடுவாய்.

4.

குன்றெனத் தோளுடையார்—கொடுங்
கூற்று நடுநடுங்கும் ஆற்றலுள்ளார்.
வென்றி செய் வினைத் திறத்தார்—ரகு
வீரனு மனுமனும் விஜயனுடன்
ஒன்றிய பரசூரர்—ஆத்ம
யோகத்திற் கண்ணனை யொத்தவர்கள்
பொன்றிரள் மேனியிலே—யான்மப்
பொலிவுறும் பளிங்கென ஒளி மிகுந்தார்.

5.

இந்திரன் மொய்ம் புடையார்—நிற்கும்
இடத்தினைச் சுற்றிலு மருட் சோதி
சந்திர னென வீசும்—திவ்ய
தனுவுடையார் ஞானக் கனலெரியும்
செந்திரு விழியுடையார்—யோக
சித்தியு முத்தியும் சக்திகளும்
சுந்திர வாழ்வினிலே—சேர்ந்து
துலங்கிடு நலங்கிளர் †அதி மனிதர்

† Supermen.

6.

உலவிடுங் கோயி லன்னர்—உல

குயிர்தம துயிரெனு முறவு மிக்கார்

புலமைகள் பலவு டையார்—நல்ல

புதுமையும் பழைமையும் போலி நடையார்

மலையினும் மாண் புடையார்—நீல

வானினும் விரிவுடை யறிவுடையார்

கலியிரு ளோட்டிடுவார்—உண்மைக்

களிப்பருள் பொன் யுகம் நாட்டிடுவார்.

7.

அத்தகை வீரரைத் தா—அம

ரானந்த வாழ்வுடை யன்பரைத்தா!

இத்தல மெங்கிலுமே—உன

திச்சையை நடத்திடும் அச்ச மிலார்,

சுத்த சுதந்திரர்கள்,—சங்கந்

துலங்குக பூரணம் விளங்குகவே.

சத்தி மஹேஸ் வரியே—உன்னைச்

சரணடைந் தனுதினம் வேண்டுகிறேன்.

ஓம் சுத்த சக்தி.

---

# இன்று மனிதனும் இனிவரும் மனிதனும்

## பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 9 | வாணிய | வாணிப |
| 3 | 3 | நஞ்சாக்குகிறது | நஞ்சாக்குகிறது ! |
| 4 | 13 | கினர் | கியது |
| 7 | 32 | வருகிறது | வருகிறது. |
| 8 | 26 | செய்து | செய்துகொண்டு |
| 8 | 31 | பகைக்கிறீர். | பகைக்கிறீர் ? |
| 11 | 23 | இம்மின்னல் | மின்னல் |
| 12 | 15 | கல்வி | கல்வி |
| 12 | 24 | தொழில் | தொழிற் |
| 12 | 25 | உறுஞ்ச. | உறுஞ்ச ? |
| 12 | 30 | அடியிடி | அடிதடி |
| 13 | 16 | போத்திக் | போர்த்துக் |
| 14 | 9 | அடுத்தது | அடுத்த |
| 15 | 8 | கசப்ப | கசப்பு |
| 15 | 17 | சந்மார்க்கம் | சன்மார்க்கம் |
| 16 | 3 | திற்க்கு | திற்குக் |
| 16 | 7 | வேகிறது | வேகிறது. |
| 18 | 20 | நந்நீர்மை | நன்னீர்மை |
| 18 | 29 | றழைத்தார். | றழைத்தார் சம்பந்தர். |
| 19 | 21 | பற்றுகளின்மை | பற்றுக்களின்மை |
| 19 | 32 | அஞ்சாது. | அஞ்சாது, |
| 22 | 19 | உண்மை | உண்மையாகும். |
| 23 | 7 | உறவு | வுறவு |
| 28 | 11 | வாக. | வாக, |
| 31 | 4 | இறைவனுக்கு | அதிமனிதன் இறைவனுக்கு |
| 33 | 8 | இருமாந்து | இறுமாந்து |
| 33 | 17 | விளங்கும். | விளங்கும். அவ்வறமே இனிவரும் மனிதனின் |
| 33 | 22 | அவனது | அதிமனிதன் [மெய்யறம். |
| 34 | 14 | மாட்டான் | மாட்டான் புதுயுக மனிதன். |

சுவாமி சுத்தானந்த பாரதியார்

அவர்கள் இயற்றிய

## அன்பு நிலைய நூல்கள்

| | | ரூ. அ. |
|---|---|---|
| 1. | பைந்தமிழ்ச் சோலை ... | 0— 4 |
| 2. | ஸ்ரீ ராமலிங்க விஜயம் ... | 0—10 |
| 3. | இன்பமாலை ... ... | 0 – 5 |
| 4. | தரும ஸாதனம் ... ... | 0— 2½ |
| 5. | உடலுறுதி ... ... | 0—12 |
| 6. | பொது நெறி ... ... | 0— 1 |
| 7. | திருக்குறளின்பம் ... | 1— 0 |
| 8. | இன்று மனிதனும்— இனிவரும் மனிதனும் ... | 0— 2 |

கிடைக்குமிடங்கள் :

1. "Anbu Nilayam" Office,
   No. 11, Tank Road,
   **SINGAPORE, (S.S.)**
2. **Sjt. AR. Annamalai,**
   (*Manager*, ANBU NILAYAM)
   **Ramachandrapuram, (Post)**
   **Pudukotah State, (S. India.)**
3. *The Manager,*
   **Sri Vivekananda Nilayam,**
   No. 11, Cameron Street,
   **SEREMBAN, (N.S.) (Malaya)**
4. *The Manager,*
   **"Janamitran Office"**
   **Pudukotah, (Post) S.I.R. (S. India.)**